# INTRODUCTORY NOTE.

It is seldom that a good actor is able to write a good play. In the few instances in which he can and does write one it is sure to possess the merits that accrue from his possessing a stand-point which is necessarily somewhat different from that of the dramatist who is not an actor. If it is true that on-lookers see most of the game, it is also true that there are some points in it which can be seen only by those who actually engage in it. Mr. A. Krishnaswamiah had won a wide and well-deserved reputation as an amateur actor long before he ever thought of putting pen to paper to indite a play.* It is not difficult to detect the merits of *Vasanthika* due to the author being an intelligent and capable actor. The actor will find no difficulty in mouthing the sentences and the audience will find the always easy and at times sweet flow of the language an undeniable comfort. There is a dramatic quality in *Vasanthika*, which, paradoxical as it may sound, is seldom found in recent South Indian dramas which are epics or romances of varying merit disguised as plays. The plot is carefully constructed. *Vasanthika* is a romantic drama. In reading it, or hearing it read, or better still in seeing it properly acted, one finds oneself wandering in an old-world Indian garden where the air is fragrant with the scent of Indian flowers. But the moon that shines overhead is sick and feverish with the sense of impending eclipse, and in the shadow of the flower-beds that border

* An appreciative sketch of Mr. A. Krishnaswamiah's career as an amateur actor, with a portrait in costume, appeared in the *Men and Women of India* for November 1906.

the path through which the gracious Vasanthika wanders lurks a deadly serpent. The moonlight dies, and the scented garden is enveloped in gloom, and the serpent coils round Vasanthika, and the deadly fangs are raised to strike. But the eclipse passes and the silver moon shines once again in the pure serene shedding her healing balm on Vasanthika's brows, and the hand of fate snatches the serpent in the very act of striking and strangles it. Mr. Krishnaswamiah succeeds in transferring to *Vasanthika* the pathos and the passion that are so characteristic of his acting. Besides in some of the dialogues there is an intellectual quality that renders them very attractive. Altogether, Mr. Krishnaswamiah has succeeded in producing a play on which lovers of the Modern Tamil Drama may congratulate him and congratulate themselves.

**A. VAMAN PAI.**

# முகவுரை.

இயல், இசை, நாடகம் என்னுஞ் செந்தமிழ் முப்பிரிவினுள், நாடகத் தமிழை நன்கறிய வேண்டுமென்னும் பேரவா தூண்ட, அந்நாடகத் தமிழில் வல்லுனராகிய அநேக வித்வச் சிரோமணிகள் இயற்றியுள்ள நாடகங்களை வாசித்தும், இன்னுந் திராவிட, ஆங்கிலத்திலுள்ள நாடகங்களை, சில வாசித்துத் தெரிந்தும், பல நடத்தக் கண்டும் அநேக நாட்களை இதனிடை யூக்கத்துடன் போக்கிவருகையில் ஓர் தமிழ் நாடகம் (இற்றைக்காலத்திற் கியன்றபடி) இயற்ற வேண்டுமென்ற விருப்பமுண்டாக இந்நாடகத்தைத் துணிந்தெழுத லானேன். இதைப் பலகால் நடத்தியும், நடத்தக்கண்டும், அவ்வப்போது தோன்றிய வண்ணம் சில விடங்களில் விஷயங்களைச் சேர்த்தும், நீத்தும், கடைசியாக இப்போது அச்சிற் பதிப்பிக்கலாயிற்று.

இந்நாடகத்தை எழுதியகாலும் பிறகும் உதவிபுரிந்த பல பிரிய நண்பர்கட்கு நன்றி யுள்ளவனா யிருப்பதுவுமன்றி, அவர்கட்கு வந்தனமும் செய்கின்றேன்.

---

## கதைச்சுருக்கம்.

### முதல் அங்கம்—வஞ்சகம் அரும்புவது.

களம் 1. அஸ்தினபுரத் தமைச்சன் குமாரன், குரூரகர்மன் அவ்வரசினையும், அவ்வரசன் அரும்புதல்வியையும் அபகரிக்க அவாக்கொண்டு, அரசன், விக்கிரம வீரனுக்கு விடமூட்ட, அவதிப்படும் அரசனைக் காண அவன் அவையினர் அரண்மனை யடைந்து அது அமய மல்லாத தறிந்து அவண்விட் டகல்கின்றனர். இறைவன் இறக்க ஈமக்கடனை முடித்து ஏந்தன் மகள், வாஸந்திகை இறைவியாகிறாள் எழினகரினர் இச்சையின் வண்ணம்.

**களம் 2.** எண்ணிய எண்ணம் எளிதில் ஈடேற்ற ரணகேஸரி யென்னுஞ் சேனைத்தலைவனையும், இறைவியின் தோழி, கமலினியையும் தன் வயப்படுத்துகிறான் குரூரகர்மன்.

**களம் 3.** பிதாவின் பிரிவாற்றாமையால் பெரிதும் வருந்தும் பெண்ணரசி நந்தவனத்திலோர் நாள் மாலை கமலினியுடன் போதுபோக்கும்போது குரூரகர்மன் ஆங்கடைந்து நன்மொழியால் மின்னிடையாள் தனக்கிணங்கிலளாகவும் அவளைச் சிறைக்கூடம் சேர்ப்பிக்கிறான்.

---

## இரண்டாம் அங்கம்—வஞ்சகம் அலர்வது.

**களம் 1.** விரகதாபத்தால் வேதனைப்படும் வீரத்தலைவன், ரணகேஸரியைக் குரூரகர்மன் வஞ்சித்து, சேனையைத் தன்வயமாக்கி, அவனைக்கொண்டு, 'இராணி அசௌக்கியமாயிருக்கும் ஏதுவால் இராஜ காரியத்தை ஏற்றுக்கொண் டியற்றிவர' இராணியின் (தான் எழுதிய தப்புக்) கைந்நாட்டு உள்ள விளம்பரத்தை நகரினர் அறியப் பரவச் செய்கின்றனன்.

**களம் 2.** கயவன் கட்டளைப்படி காராக்கிருஹத்திலிருக்கும் காரிகைக்குக் கமலினி ஆகாராதிகள் கொண்டு சென்று, தேவிக்குத் தேறுதல் கூறி அமைச்சன் குணசீலனை அழைத்துவர அவன்பா லடைகிறாள். குரூரன சிறை சேர்ந்து செல்வியிடந் தன் குறையிரக்க இயையாத இறைவியை அன்றிரவு இயையச் செய்வதாய் இயம்பிச் செல்கிறான். கோபமீக்கொண்ட குணசீலன் குரூரகர்மன் கொடுமையை நேரிற்கண்டு கொற்றவன் குமரியைச் சிறை நீக்குவதாய்ச் செப்பிச் செல்கிறான். காவியுடையோன் றெடுத்துக்கொண்டு, சிறையடைந்து அங்கிருந்த தேவியைத் தப்புவிக்கிறாள் கமலினி. மறுபடியும் வந்த வஞ்சகன் வாஸந்திகையைக் காணாது காரியங் கெட்டுவிட்டதாய்க் கருதிப் போகிறான்.

**களம் 3.** நடந்துள்ள விபரீதத்தை யறிந்த நகரமாந்தா ஸ்ரீகாந்தரென்னும் பிரபுவை நாடி யவரிடங் குறையிட்டாரவாரிக்க, சேனைவீர ராங்கடைந்து யாவரையும் சிறைசெய்து ஸ்ரீகாந்தரையுங்கொன்று விடுகிறார்கள் குரூரகர்மன் கட்டளைப்படி.

**களம் 4.** காராக் கிருஹத்தைக் கடந்து கமலினி காட்டிய வழி தப்பி காடெல்லாம் அலைந்து கடைசியாக ஓர் தடாகக் கரையில் உணவருந்தும்போது, நகர்க் கிறைவியை நாடிப்பிடித்துவர நய வஞ்சகனுல் அனுப்பப்பட்ட நாட்டுப்புற வாசியாகிய பனமரத்தான் அங்கு வருகிருன். வந்தவன் வாஸந்திகையின் வனப்பினைக்கண்டு, வனதேவதை என மதிமருண்டு கலங்கி நிற்கிருன். ஈதறிந்த மாது ஏதிலா அவனை ஏற்புடைத் துணையாகக் கொண்டேகுகிருள் விராடநகர்க்கு.

**களம் 5.** நன்றி கொன்ற குரூரகர்மன் நகர்ச்சேனைத்தலைவன் மீது நாடருங் குற்ற மேற்படுத்தி நகரப்பிரவேசைசெய்ய, நடுநிலை நாடா நஞ்சினுங் கொடிய வஞ்சகனை நசுக்கி நாசமுறுத்துவே னென்று நடுக்குற நவின்று நகரினை நீங்குகிருன் ரணகேஸரி.

## மூன்றும் அங்கம்—வஞ்சகம் அழிவது.

**களம் 1.** விராட வேந்தனும் வீரசேனன் மைந்தன், சுகுமாரன் வாஸந்திகையின் சித்திரப் படத்தைக் கண்ணுற்று மாளா மையல்கொண்டு வருந்தும்போது, வாஸந்திகை மடிந்தாளென வந்த நிருபத்தைத் தன் தந்தை தெரிவிக்க, இனி மற்றெந்த மங்கையையும் மணம் புரியேனென்றும், துறவற மார்க்கத்தையே வகிப்பதாயும் வாக்கு நிண்ணயம் செய்கிருன். கள்வர் கடுங்கணை மிகுவதுகண்டு அதனைக் களைவான் அன்றிரவு மாறுவேடத்துடன் நகர்ச் சத்திரத்திற் போயிருக்கிருன் சுகுமாரன்.

களம் 2. தேவி, வாஸந்திகையைத் தேடிவந்த சேடி, கமலினி சந்திரத்தைச் சேர்கிறாள்; ரணகேஸரியும் அங்கு வருகிறான். இருவரும் சந்திக்க நேர்ந்தது இறைவியைத் தேட இயைந்து பிரிந்துபோகிறார்கள். பனமரத்தாலும் சன்யாசியுடை பணிந்துள்ள வாஸந்திகையும் அங்கு சேர, அங்கிருந்த இளவரசன் பொய்ச் சன்யாசியை உபசரித்து உபதேசம் உணர்த்துமாறு உண்மனைக்கிட்டுக்கொண்டு போகிறான்.

களம் 3. சுகுமாரனுக்கும், அவன் நேயன் கருணாகரனுக்கும் சன்யாசி உலக உண்மையை யுரைக்கும்போது, சுகுமாரனைக் காவலனழைக்க அவன் போகிறான். வாஸந்திகையின்மீதுள்ள மையலைக் கருணாகரன் சன்யாசிக்குச் சொல்கிறான்.

களம் 4. சன்யாசியாகத் தான்வர நேர்ந்த சமயத்தை சுகுமாரனுக்கு வாஸந்திகை தெரிவிக்கிறாள். வீரசேனனும், வித்தகனும் கருணாகரனும் வந்து விளைந்தது தெரிந்து விலகா மகிழ்ச்சி மீக்கொள்கிறார்கள். ரணகேஸரியையும், கமலினியையும் வீரசேனன் அங்கு வருவிக்க, இருவரும் தமது இறைவியைக் கண்டு இன்ப மெய்துகின்றனர்.

களம் 5. வீரசேனனால் விராடசேனையைத் துணைக்கொண்டு ரணகேஸரி ஹஸ்திநபுரத்தை மேவி, விசுவாசகாதகன் சேனையை வேருடன் கெடுத்து விரோதியைக் கொன்று முடியை எடுத்துக் கொள்கிறான்.

களம் 6. வெற்றி வீரனாய் ரணகேஸரி காத்த முடியை அஸ்திநபுரமடைந்த வீரசேனன் வாஸந்திகை விரும்பிய வண்ணம் சுகுமாரனுக்குச் சூட்டுகின்றான்.

---

சில காரணத்தால் அவசரமாக அச்சிற் பதிப்பித்த இந்நாடகத்துட் டோன்றும் பிழைகளை நீக்கி உத்தமர்கள் ஏற்றுக்கொள்வார்களென்று உறுதியாய் நம்புகின்றேன்.

இப்படிக்கு,

அ. கிருஷ்ணசாமி.

# OPINIONS.

M. R. Ry. S. Bavanandam Pillai Avergal writes :—"Vasanthikay" written by Mr. A. Krishnaswami Iyer is doubtless a very desirable contribution to Tamil Dramatic Literature on modern lines free from slavish adherence to the Oriental Dramaturgy. The plot of the story is well conceived and the style is plain and simple throughout. Although this is the maiden attempt of the author he has displayed remarkable skill in artistically linking together several excellent situations from the stand point of science of histrionics for which he has considerable natural aptitude.

I sincerely wish that the author will employ his undoubted histrionic talents in the direction of producing well thought out literary works of a similar nature free from typographical errors which, unfortunately, occur in this first instalment of his publications.

M. R. Ry. V. V. Sreenivasa Aiyangar Avergal, B. A., B. L. writes :—I have read with considerable interest, the copy, you were so good as to send me, of your 'Vasanthika'—your literary first born. The language is, generally free, flowing and natural: and I am glad you have followed the right path and successfully withstood the fatal temptation of the young and ambitious author to appear learned by being pedantic. The plot has points of merit and the scenes sustain the interest in the story. The action is also brisk. The characters are fairly defined in outline. But I will not flatter you that the work is perfect. You need not despair of the futility of future effort. There is abundant room for improvement especially in details and in the way of development of characters. But I forget I am not writing a criticism. Suffice to say that the faults such as they are, are only those of a first-born. Emaciation of parts, disproportion in others, inexplicable patches, absence of sharp lines, a c nfusion of resemblances, uncertainty of colour and the like are characteristics which do not detract from the general excellence of the work or the promise for the future. It seems to me that the work which you are proposing to present to the public would represent the remarkable instance of an actor inspired by the stage and blossoming into an author. The aroma is, I observe, throughout, appropriately enough,

that of the stage and not of the studio. May it go forth into the world and be welcome as amongst other things a noble illustration of the elevating influence of the stage. May it have long life and prosperity in its world elect. And may it have many sisters and brothers born hereafter, still more beautiful and more potent to instruct and inspire.

M. R. Ry. T. Kanakasundaram Pillai, Avergal, B. A. writes :—I write to thank you for the copy of your pleasant drama—Vasantika—from a perusal of which I have derived considerable pleasure. I think it excels in many respects—chiefly in point of style and in the treatment of character–many similar works which have lately appeared in Tamil. I notice with regret that there are a number of printing mistakes, which I have no doubt will be removed in a second edition.

M. R. Ry. P. Sambanda Mudaliyar Avergal., B. A., B. L. writes :—I have gone through your book "Vasanthika" which you so kindly sent me. I have been impressed favourably with what I read. I really think that Tamil Literature requires to be improved very much, so far as the field of fiction is concerned ; and all efforts in that direction ought to meet with the encouragement of the lovers of this ancient tongue. I hope you will turn out more original works in future. Wishing you all success.

M. R. Ry., V. Raghunatha Sastriar Avergal B. A., B. L., writes :—I thank you for the copy of "Vasanthika" which you sent me. Of its literary merit I am hardly competent to say much. As a drama its successful production on the stage on more than one occasion bears ample testimony to and affords full guarantee for its excellence ; and I need only add that I have always looked forward with very great pleasure to a performance of "Vasanthika." Your rendering of the heroine is fit to rank with your Leelavathi, Chandramathi, Padmavathi and Ratnangi.

# சாற்றுக் கவிகள்.

## முத்தமிழ் ரத்நாகரம்
## சைவ ஸ்ரீ ம. தி. பாநுகவி யவர்களால்
## வாசந்திகையின் சிறப்புப் பாயிரம்

### ஆசிரியப்பா.

மணிமலி கடல்சூழ்ந் தணிபெறு முலகில்
வாழு முயிர்களிற் றாழ்வின் மக்கள்
மனங்கொண் டறியு மிணங்கொ ளின்பின்
மேலது நாடக நூலது சுவையெனப்
பண்டை யறிஞர் கண்டுற் றதனை
யாரிய மென்னுஞ் சீரிய பாடையின்
முதுமொழிப் புலவ ரிதமுற வகுத்தனர்
நலமலி யவையும் புலவருக் கன்றிப்
பயன்றரா தென்பதை நயந்தவ ரறிவர்
அமிழ்தினு மினிய தமிழெனு மொழியில்
அவ்வகை யின்பஞ் செவ்விதி னடையத்
தாவில் பொருண்மலி கோவை யன்றி
காணேம் பிறவது கோணிறு வலர்க்கே
பற்றிடு மின்ப மற்றையர்க் கின்றதை
மாற்ற வாங்கிவர்க் கேற்ற மதம்பற்றி
நாடக முறையிற் கோடலின் றாக
அனைவரும் பயின்றுளி வினைவிலின் பாரப்
புதியன புகுதலாம் விதிதுணை யாக
நேசந் தகையா வாசந் திகையெனும்
இன்ப நாடக மன்பி லமைத்துப்
பாத்திர மாவார் தோத்திரம் புரியத்

தந்திசை யுற்றன னந்தணர் சூளாமணி
சகுண மிகுந்த சுகுண விலாசன்
எல்லையில் தவத்தோன் நல்லவ தானம்
இலட்சுமி நரசயர் சுலக்ஷண புதல்வன்
கற்றவர் புகழப் பெற்றிடு பெரியோன்
ஆங்கில முதற்கலை பாங்குட னுணர்ந்தோன்
நண்பினும் பண்பினும் மண்புகழ் தோன்றல்
விருஷ்ணி குலத்துக் கிருஷ்ணன் பெயரொடு
நாமின் புறவுரை சாமியென் றெவரும்
கூறும் பெருமை யேறுநற் றவனே.

வெண்பா.

வாசந் திசைவீசு வண்மலரி லெவ்வுலகும்
வாசந் திசைமன்னி வாழுமே—வாசந்
திசைவருட னூருகச் சேர்கிருஷ்ண சாமி
தசையறவே செய்ததனுற் றுன்.

---

உ

தமிழ்ப் பிரமசூத்திராசிரியராகிய

ஸ்ரீலஸ்ரீ, சுவாமி, விருதை, சிவஞானயோகிகளால்

இயற்றப்பெற்றன.

விருத்தம்.

மன்னர்புகழ் சென்னைநகர் தனிலறிவிற்
கின்னவரு மகிழ்ந்துகண்டு
பொன்னின்மதி துன்னநடம் புரிசுகுண
விலாசமெனும் பொற்பார்சங்கந்
தன்னிலங்கத் தவன்வேதம் பன்னியலந்
தணன்கிருஷ்ண சாமியையன்
சொன்னயங்கண் மிகவாசந் திசைநாட
கம்மியற்றிற் றுதிபெற்ருனல். (1)
நானமிகு குழல்வாசந் திசைநாட
கம்படிக்கில் நடிக்கப்பார்க்கில்
ஊனுருகு முளமுருகு முயிருருகு
மனஞ்சறறு முருகாத்தீய

கானவரு மிரங்குவர்கோ மகள்துயர்க்கன்
னவள்மணந்த கதையைக்கேட்கு
மோனிகளும் வாய்விண்டு மகிழ்வரெனி
லமைப்பருமை மொழிவதென்னே ! (2)

பயன்.

தீவழியி லரசடைந்து கொடுமைபுரிந்
தவர்வியாயஞ் செப்புவாரைக்
கோவலரென் குறைப்பெயரா லொறுப்பவரிங்
கொழிவருளங் கொண்டதீய
ஆவலினன் முறைபிறழ்வோ ரழிவர்மற
மறமாகு மன்னோர்க்கென்ற
மேவுமுண்மை கண்டிடவா சந்திகையுஞ்
சனமாக விளங்கிற்றன்றே.

---

சென்னை பச்சையப்பன் கலாசாலை, தமிழ்ப் பண்டிதர்

க. வ. திருவேங்கட நாயடு

அவர்களாலியற்றப் பெற்றன.

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மன்னுமவ தானலட்மி நரசையன் செய்தவத்தான்
மகிபால் வந்த
பன்னுமருட் டமிழ்தேருங் கிருட்டினசா மிக்கவிஞன்
பாரில் யாரு
முன்னுமமு தெனவுண்டு தேக்கிடவா சந்திகைநா
டகமு ளுற்றித்
தென்னிடவிட் டன்னதனைத் தேர்ந்தறியின் சுவைபலவிற்
றிகழு நன்கே.

## சித்தாந்தசரபம்—அஷ்டாவதானம்

## ஸ்ரீ பூவை - கலியாணசுந்தர முதலியாரவர்கள்

## இயற்றியன.



நல்லவருக் கிடையூற்றினைத்தேடி லதுதனக்கே நஷ்டமென்னு[ந்த
வல்லவர்சொல் லியநீதி தனக்கோர்து லக்கதையாய் வெண்மைவாய்
பல்லரிய நயமனைத்து மமைந்தவா ஸந்திகைநூற் பாரின் மெச்சச்
சொல்லினனா டகமாக வாறுகள மூன்றங்கந் துலங்க மாதோ

அன்னவனிச் சென்னைமா நகரதனிற் கொண்டாடி யாருமேத்த, மன்னியதோர் நற்சுகுண விலாசசபை புவிவியக்க வளர்ப்போர் தம்மில், இன்னவனு மொருவனென வேயிருந்து மிகுகீர்த்தி யியங்க வாழ்வோன், பன்னரும்விப் பிரர்சிகா மணிகிருஷ்ண சாரியாம் பாவலோனே.



உரையாசிரியர் மஹாவித்வான் காஞ்சீபுரம்

சபாபதி முதலியார் பௌத்திரனும்

கா. பாலசுப்பிரமணிய முதலியார் ஜேஷ்டகுமாரனுமாம்

## ஸ்ரீ கா. பா. வேதபுரீசன்

## இயற்றியன.

### சந்தவிருத்தம்.

உவமை தானெனுஞ்செந் தமிழின் முப்பிரிவு
    ளுயரு நாடகமோர் கோவையை
ஒங்கு போறிஞரோர்வ ரன்றிபிற
    ருணர்கி லார்களென வுன்னியே
நவமி குந்திடுவா சந்திகைப்பெயர் கொ
    ளுடகந்தனைநன் னயமொடே
நன்மை நாடரியர் தீய ரழிவரெனு
    னவிலு நீதிமொழி நாட்டியே
அவனி யோர்புகழ அங்க மூன்றிலொளி
    ராறு நற்களமு மணிகொள
ஐந்து மூன்றிலழி யாறு நற்சுவையு
    மமைய வைத்தக மகிழ்ந்தனன்

பவம கற்றுபதி வகர முற்ற நடு
துரை தனக்கு துரை சாமியாம்
பவுடிகம் மூதல மறையினைத் துதிசெய்
பயனடைந்திடுமெ னண்பனே.

## வெண்பா.

குலாவு வளஞ்சென்னை கூடுஞ் சுகுண
விலாச சபைவிளங்க மேவு—நிலாவே
யிலா பக்கச் சாமி யியற்றுதமிழ்க் காதை
யுலாம்புகழோ டென்னாளு மோங்கி.

———

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருந்தியது. |
|---|---|---|---|
| | 25, 26 | உத்திரவின்படி, | உத்தரவின்படி. |
| 23 | 25 | அடக்கின்றேன், | அடக்குகின்றேன். |
| 36 | 19, 20 | செய்திருங்காங்களே, | செய்திருக்காங்களே. |
| 36 | 23 | ஆடமாட்டங்களா, | ஆடயாட்டாங்களா. |
| 44 | 15 | வீணை, | வீணைக. |
| 46 | 25 | குரூகர்மனை, | குரூரகர்மனை. |
| 47 | 19 | இல்லையோ, | என்னவோ. |
| 62 | 13 | வீசுகின்றான், | விசிறுகின்றான். |
| 64 | 25 | இவ்வழிகளாவது, | இவ்வழிகளாலாவது. |
| 80 | 27 | ஆஹா, | ஆ, ஹா. |
| 83 | 18 | சட்டமாத்திரத்தில், | கேட்டமாத்திரத்தில். |
| 87 | 14 | ஒன்றிக்கும், | ஒன்றிற்கும். |
| 94 | 22 | இயல்யுடையது, | இயல்புடையது. |
| 107 | 2 | "ஓர்சேவகன் வருகிறான்" என்பதை முதல்வரியாகக்கொண்டு படிக்க. | |

# நாடக பாத்திரங்கள்



| | |
|---|---|
| குணாலயன். | ஹஸ்தினாபுரமன்னன் மந்திரி. |
| குணாகரன். | குணாலயன் புதல்வன். |
| ராஜகேஸரி. | ஹஸ்தினாபுர சேனாதிபதி. |
| வீரசேனன். | விராடதேச மன்னன். |
| சுகுமாரன். | வீரசேனன் புதல்வன். |
| கருணாகரன். | சுகுமாரன் நேசன். |
| ஸ்ரீகாந்தன்.<br>வசுதேவன். | ஹஸ்தினாபுர மன்னன் சபையில் பிரபுக்கள். |
| வித்தியாஸாகரன்.<br>ஆனந்தஸாகரன். | ஜோதிடர்கள். |
| ஸஞ்சீவி. | ஓர் வைத்தியன். |
| ஜெயபாலன். | கமலினியின் தந்தை. |
| பாயமாத்தான். | ஓர் நாட்டுப்புற வாசி. |
| வாஸந்திகை. | ஹஸ்தினாபுரமன்னன் விக்கிரமவீரன் புதல்வி,<br>சுகுமாரன் மனைவி. |
| கமலினி. | வாஸந்திகையின் தோழி. |

நகரவாசிகள், சேனாவீரர்கள், சேவகர்கள் முதலானோர்.

கதைநிகழிடம்.—பெரும்பான்மை, ஹஸ்தினாபுரத்திலும், விராடதேசத்திலும், சிறுபான்மை, ஹஸ்தினாபுரத்தை அடுத்த வனத்திலும்.



# வாஸந்திகை.

## முதல் அங்கம்.

### முதற் களம்.

இடம்:—விக்கிரமவீரருடைய அரண்மனையில் ஓர் பள்ளியறை.

காலம்:—மாலை.

ஆனந்தஸாகரன், வித்தியாஸாகரன் என்கிற இரண்டு ஜோஸ்யர்கள விக்கிரமவீரருடைய ஆயுர்பாவத்தைப்பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். அதைக் குநாசர்மன் சற்று தூரத்தி லிருந்து கவனிக்கின்றான். இரண்டு சேவகர்கள் வெளியே நின்றுகொண்டிருக்கிறார்கள்.

ஆன. ஆ! நானப்பொழுதே சொல்லவில்லையா? எந்த விதமாய்ப் பார்த்தாலும் எல்லாம் ஒன்றுதானே.

குரு. ஆனந்தஸாகரரே, என்ன தெரிந்து கொண்டீர் நீர்?

[வித்தியாஸாகரன் ஆனந்தஸாகரனை நோக்கி உண்மையை உரையாவண்ணம் சைகைசெய்கிறான்.]

ஆன. உம்.—வேறொன்றுமில்லை; இப்பொழுது மஹாராஜாவுக்குத் தேகம் அசௌக்கியமா யிருப்பதற்குக் காரணம் கிரஹங்களின் குரூரந்தான். இதற்கு என்ன சாந்தி செய்தால் தீருமென்று யோசிக்கின்றோம். இன்னும் நிச்சயமாகவில்லை.

குரு. நல்லது யோசியுங்கள். [தனக்குள்] இனி நான் யோசிக்கவேண்டிய தொன்றுமில்லை. மஹாராஜாவுக்குப

பாலில் கலந்து கொடுத்த மூலிகை பிரயோஜனமற்ற தாய்விடுமோ? அது வேலையை முடித்துவிடும். சந்தேகமில்லை.

ரணகேஸரி வருகிறான்.

ரண. நண்பரே, மஹாராஜாவுக்குத் தேகம் என்னவா யிருக்கின்றது? அனுகூலமா?—

குரு. நானும் அதை விசாரிக்கவே வந்தேன். ஆனால் சமாசாரம் ஒன்றும் இன்னும் தெரியவில்லை.

ரண. அப்படியா?—சேவகா! வா இப்படி.

[சேவகன் ரணகேஸரியின் சமீபத்தில் வருகின்றான்.]

மந்திரி, குணாலயர் உள்ளே இருக்கின்றாரா?

சே. ஆம், இருக்கின்றார்.

ரண. மஹாராஜாவுக்குத் தேகம் எப்படி யிருக்கின்றது?

சே. உம்.—அப்படித்தா னிருக்கின்றது.

ரண. அப்படியா? இவர்க ளிருவரும் என்னசெய்துகொண்டிருக்கின்றார்கள் இவ்விடத்தில்?

குரு. இவர்கள் மஹாராஜாவின் ஜாதகத்தைப் பார்க்கின்றார்கள்.

ரண. அப்படியா?

குணாலயன் பள்ளியறையினின்று வெளியே வருகின்றான்.

குண. [சேவகர்களை நோக்கி] எங்கே வைத்தியர்? இன்னும் வரவில்லையா? உடனேபோய் அழைத்து வாருங்கள்.

குரு. [தனக்குள்] உம்.—இனி திருப்ப முக்கண்ணனாலும் முடியாது.

ரண. குணசீலரே, மஹாராஜாவுக்கு இப்போது எப்படி யிருக்கின்றது ?

குண. நானென்ன சொல்லுவேன் ? சிறிதும் குணம் காண வில்லை

குரு. [தனக்குள்] எப்படிக்காணும் ?

ரண. ஆ ! அப்படியா ?

குண. பாரும், இந்த வைத்தியர் ஸஞ்சீவி இன்னும் வரவில் லையே. [நான்கு பக்கமும் பார்த்துப் பிறகு]ஜோதிடர்களே, மஹாராஜாவின் ஜாதகத்தைப் பார்த்தீர்களே, எப்படி இருக்கின்றது ?

ஆன. அஷ்டமாதிபதி தசையா யிருப்பதால் குரூர மென்றே சொல்லவேண்டும். ஆயினும்—

வித். அதுமட்டு மல்ல. மேலும் மூன்றாவது வீட்டுக்காரனு டைய புக்தி வந்துவிட்டது. ஆகையால் இதைச்சற்று நன்றாக யோசிக்க வேண்டியதுதான்.

பள்ளியறையினின்று ஒரு சேவகன் வருகின்றான்.

சே. [குணசீலனை நோக்கி] மஹாராஜா தங்களை அழைக் கின்றார்.

குண. இந்த வைத்திய ரின்னும் வரவில்லையே ! —மெல்லப் பேசுங்கள்.

ஒரு காவற்காரனும் அவன்பின் ஸஞ்சீவியும் வருகின்றார்கள்.

என்ன புத்தியில்லாத காரியம் செய்தீர் ? மருந்தைக் கொடுத்துவிட்டு எங்கே போய்விட்டீர் ?

ஸஞ். இல்லை. ஒரு நூதன ஔஷதம் செய்வதற்காகப் போ யிருந்தேன்.

குண. வைத்தியர்களின் குணத்தைக் காட்டிவிட்டீரே! வாரு முடனே!
[குணாலயனும் ஸஞ்சீவியும் பள்ளியறைக்குள் போகின்றார்கள்.]

ரண. நண்பரே, மஹாராஜாவுக்குத் தேகம் குணமாயிருக்கிறதாகக் காணோமே?

குரு. வாஸந்திகை கொடுத்துவைத்தவள்!

ரண. இராஜகுமாரி ஒன்றுமறியாதவளாயிற்றே!

ஸ்ரீகாந்தன் வருகின்றான்.

ரண.
குரு. } வாருங்கள்! வாருங்கள்!

ஸ்ரீ. மஹாராஜாவுக்குத் தேகம் அனுகூலமா? போய்ப் பார்க்கலாமா?

ரண. குணம் சிறிது மில்லையாம்.

ஸ்ரீ. ஐயோ! அப்படியா? இதென்ன விபரீதம்! நமது அரசர் மனுநீதி தவறாதவராயிற்றே! குடிகளை ஆதரிக்கும் விஷயத்தில் அத்தியந்த அன்புள்ளவர்! தன்னைத் தஞ்சமென்றடைந்தோருக்கு அபயம்கொடுத்து ஆதரிக்கும் கருணைவள்ளல்! அரசருடைய உயிருக்கு அபாயம் நேரிடுமாகில் நமது நாட்டிற்கு என்ன கெடுதி சம்பவிக்குமோ? ஆஹா! இதென்ன சங்கடம்!

குரு. ஸ்ரீகாந்தரே, அப்படிப்பட்ட கெடுதி இந்நாட்டிற்கு ஒன்றும் வராது.

ஸ்ரீ. ஆனால் மஹாராஜாவுக்குக் கெடுதி வருமென்பது மாத்திரம் உமக்குத் தெரிந்திருக்கிறது போலும்.
[குரூரகர்மன் ஸ்ரீகாந்தனை உற்றுப் பார்க்கின்றான்.]

குணலயரும் ஸஞ்சீவியும் பள்ளியறையினின்று
வெளியே வருகின்றார்கள்.

குண. அது போகட்டும்; உமக்கு என்ன தோன்றுகின்றது?

ஸஞ். எனக்கென்ன தோன்றுகின்றது !

குண. வாருங்கள் ஸ்ரீகாந்தரே! சற்று மன்னிக்கவேண்டும்.— வைத்தியரே என்ன சொன்னீர் ?

ஸஞ். சொல்லவேண்டியதென்ன ? நான் இப்பொழுது ஸஞ்சீவிமாத்திரை கொடுத்திருக்கின்றேன். அதினால் ஒரு வேளை திரும்பலாம் !

ஸ்ரீ. என்ன குணலயரே! முடிவில் இப்படியாய்விட்டது. ஜாதகத்தைப் பார்த்தார்களா ?

குண. இதோ இவ்விருவரும் இன்னும் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். என்ன ஜோஸ்யர்களே, இன்னும் என்ன யோசிக்கின்றீர்கள் ? என்னகாரணத்தால் இப்படியிருக்கிறது ?

ஆன. என்ன காரணம்! மூன்றாவது சனி பிரதகக்ஷணத்திலிருந்து கொண்டிருக்கிறார் ! போதாக்குறைக்கு மாரகாதிபதியின் சம்பந்தக்ரஹத்தின் தசையாயிருக்கிறது. உம்—தப்புவது துர்லபமே.

வித். இன்னும் விசேஷமாகவும் சொல்லவேண்டியதாயிருக்கின்றது! தசாநாதரோடு இராகு சம்பந்தப்பட்டிருப்பதால் விஷத்தால் ஏற்பட்ட பீடை என்றே சொல்லவேண்டும்.

எல்லோரும். என்ன ! என்ன !

குண. விஷத்தாலென்றால் விஷஜெந்துக்களாலா அல்லது விஷம் ஊட்டப்பட்டா ? அதைத் தெளிவாகச் சொல்லும். [குணரகர்மன் வித்தியாஸாகரனை உற்றுப் பார்க்கின்றான்.]

வித். [தலையசைத்து] சரிதான்! இராகு அஷ்டம விரய புக்தியடைந்திருப்பதால் பகையால் விஷம் கொடுக்கப்பட்டதாகவே சொல்லவேண்டும்!

எல்லோரும். என்ன! என்ன!

குண. அப்படிப்பட்ட பாதகன் யார்? அவனைக்கண்டு பிடிக்க முடியுமா?

வித். ஆஹா! முடியும். இக்-குரூர—

குரு. யார்?

வித். இக்குரூரத்தொழிலைச் செய்தவனுடைய அங்கங்களையும் நிறத்தையும் மாத்திரம் சொல்லமுடியும்.

குண. ஆனால் உடனே சொல்லும்.

வித். இதற்கு வேண்டிய கிரந்தங்களை நாங்கள் இப்பொழுது கொண்டு வரவில்லை. கிரந்தங்களை நன்றாகப் பரிசோதித்து நமது மன்னனுக்கு இத்தீங்கு விளைவித்த பாவியின் குறிகளை நாளைதினம் சொல்லுகின்றேன்.

எல்லோரும். அப்படியே.

பள்ளியறையினின்று ஒரு சேவகன் வருகிறான்.

சேவ.—[குணலயனை நோக்கி] வாஸந்திகாதேவி தங்களை அழைத்துவரச் சொன்னார்கள்.

[குணலயனும் சேவகனும் உள்ளே போகின்றார்கள்.]

குரு. [தனக்குள்] ஓஹோ! எல்லாம் கெட்டுவிடும்போலிருக்கின்றது! இந்த வேதியனை உயிருடன் வைக்கலாகாது! இவன் எதை என்மேல் சந்தேகங் கொள்ளுகிறதற்கு, இடமாகச் சொல்லிவிடுவானோ? இவனை இன்றிரவே முடித்துவிடவேண்டும். சரி! தீர்ந்தது!

துலையன் வருகின்றான்.

துலை. நண்பர்களே, நீங்களெல்லோரும் மஹாராஜாவைக் காண ஆவலோடு வந்திருக்கின்றீர்கள். மஹாராஜாவுக்கு மயக்கமதிகமாயிருப்பதாலும் அடிக்கடி மாரடைப்பதாலும் அவரை இப்பொழுது நீங்கள் பார்ப்பது கூடாத காரியம். ஈசன் கருணையால் மஹாராஜாவுக்கு உடம்பு அனுகூலமாய் விட்டால் நீங்கள் யாவரும் நாளைய காலை அவரைப் பார்க்கலாம். வைத்தியர் இப்பொழுது ஒருவரும் உள்ளே செல்லக்கூடாதென்று சொல்லிவிட்டார்.

எல்லோரும். அப்படியா? ஈசன் கருணையால் அப்படியே நாளைக்குப் பார்த்துக்கொள்ளுகிறோம். சுவாமி காப்பாற்றுவாராக. [எல்லோரும் போகின்றார்கள்.]

---

# முதல் அங்கம்.

## இரண்டாவது களம்.

இடம்: ஹஸ்திநபுரத்தில் மந்திரி துலையன் மனையின் முன் தோட்டம். காலம்:—காலை.

துரகர்மன் விஷ மூலிகைகள் அடங்கிய ஓர் சிமிழுடன் வருகின்றான்.

துரு. அன்று நான் மஹாராஜாவுக்குக் கொடுத்தது போதுமானதாயிருந்தும் ஏன் அது தன் குரூரத்தை உடனே காட்டவில்லை? உம்! சந்திரசேகரன் வந்தாலும் நான் சாகவென்று நியமித்த ஒருவனை மீட்கமுடியுமா! ஊரிலுள்ள வைத்தியர்கள் தங்கள் தங்களாலானமட்டும் முயன்றும் முடிவிலடைந்த பயனென்ன? யாரெண்

ணம் நிறைவேறிற்று? சரி! இனி நான் தாமதிக்கலாகாது. எப்பொழுது நான் முதல்முதலாரம்பித்த காரியம் கைகூடியதோ இனி செய்ய உத்தேசித்திருக்கிற விஷயங்களும் கைகூடுவதில் சந்தேகமில்லை. வாஸந்திகைக்கு முடிசூட்டி மஹாராணியாக்கின மஹோத்ஸவத்தையும் கருதாது, மஹாராஜாவை இழந்ததற்காக இன்னும் நகரமாந்தர்கள் என்ன துக்கமடைகின்றார்கள்! என்ன துக்கமடைகின்றார்கள்! அம்மட்டும் நான் அந்த வேதியன் வித்தியாசாகரனை யமலோகத்திற் சனுப்பியதே நலமாயிற்று. அவன் மாத்திரம் எதையேனும் பிதற்றியிருப்பானாயின் நான் எண்ணிய எண்ணங்களெல்லாம் பாழாயிருக்குமே! என்ன! என் எண்ணங்களா பாழாகும்? ஒருகாலுமில்லை. மும்மூர்த்திகள் வந்து தடுத்தபோதிலும் நான் முன் வைத்தகாலைப் பின் வாங்குபவனல்ல. நல்லது, இந்த ஸ்ரீகாந்தன் மாத்திரம் என்னை ஏதோ சந்தேகிக்கின்றான் போலும். சீ! இவனெனக்கு எம்மாத்திரம்? இன்றிரவே இவனையும் முடித்து விடுகின்றேன். குரூரகர்மனுடைய ஆற்றல் அளவற்றதென்று உலகம் புகழும்படி செய்யாவிட்டால் என் பெயர் குரூரகர்மன் அன்று. இனி நான் அரைக்ஷணமும் சும்மாயிருக்கலாகாது. நடக்கவேண்டிய விஷயத்தைப்பற்றி யோசிக்கவேண்டும். இப்பொழுதென்ன செய்வது நான்? முதலில் இவ்விராஜ்யத்தை அடையவேண்டும். இதற்கென்ன செய்ய... நேற்று கொலுமண்டபத்தில் வாஸந்திகையின் உ... திரவின்படி நடப்பதாக ரணகேஸரி என்தந்தை முதலானவர்களெல்லோரும் பிரதிக்ஞை செய்திருக்கிறார்கள். இந்தச்சங்கடத்திற்கு என்னசெய்கிறது? சேனைகளெல்லாம் ரணகேஸரியின் கட்டளைக்குட்பட்டிருக்

கின்றன. எனது தந்தையோ ஸாத்வீகர்; எஜமானத் துரோகம்செய்யாதவர். வாஸந்திகையைத் தன் கண்ணைப்போல் பாவித்துவருபவர். [சற்று யோசித்து] ஏன் இவர்களிருவரையும்—இதைப்பற்றி இப்பொழுது என்னயோசனை? பிறகு பார்த்துக்கொள்ளுவோம். ஏன் நான் வாஸந்திகையைச் சந்தித்து என்னை விவாகம் செய்துகொள்ளும்படி கேட்கலாகாது? நாங்களிருவரும் சிறுவயது முதல் ஒன்றாய்க்கற்று விளையாடிக்கொண்டிருந்தவர்களாயிற்றே! மேலும் அந்தக் கன்னிகையைப் பார்க்கும்பொழுதும் நினைக்கும்பொழுதும் சந்திரனைக்கண்ட சந்திரகாந்தக் கற்போல என் மனமும் உருகுகின்றது. அப்பத்மலோசனியை அடையாத ஜன்மமும் ஒரு ஜன்மமா? ஒருவேளை இராஜகுமாரி மறுத்துவிட்டால் என்ன செய்கின்றது? உம்! எப்பொழுது இந்த இராஜ்யம் என்னாளுகைக்குட்படுகின்றதோ, அப்பொழுதே அவளெனக்கு அடிமையாய் விட்டாளன்றோ? பிறகு பலவந்தஞ்செய்து விவாகம் செய்துகொள்ளுகிறது. சீ! இதென்ன இந்தத் துரோக எண்ணம் எனக்கு! என் புத்தி இவ்வாறு மாறிவிடுமெனபதை வாஸந்திகைமுன்பே அறிந்திருந்தாலென்னிடம் அன்பு பாராட்டி நடந்திருப்பாளா? சீ! இதென்ன இவ்வாறு யோசிக்கின்றேன்? நான் இவைகளையெல்லாம் ஒரு பொருட்டாக எண்ணுவேனாகில் என் எண்ணம் என்னவாய்முடியும்? இராஜ்யம் எப்படிக் கைகூடும்? என்ன வீண்யோசனை? இனி நடக்கவேண்டியதை யோசிப்போம். நான் முதலில் ரணகேஸரியை வசப்படுத்திக்கொள்ளவேண்டும். சேனைகளோ அவன் கையிலிருக்கின்றது. இந்த ரணகேஸரி ஒரு பைத்தியக்காரனல்லவா? சுத்தவீரனானாலும் ஸ்தோத்திரப்

பிரியன். சரி! இவனை ஏமாற்றியே என் காரியத்தை முடித்துக்கொள்ளவேண்டும். இந்த இரண்டு மூன்று தினங்களாக இவனும் வாஸந்திகை தன்னை மெச்சும் படி இராஜரீக விஷயங்களை அதிஜாக்கிரதையாய் நடத்துபவனாக நடித்துக் காட்டிவருகின்றான். இவனும் ஏதோ எண்ணங் கொண்டிருக்கின்றான் போலும். மஹாராணியோ கன்னிகை [யோசித்து] ஆம்! இது தான் நல்லயோசனை! நான் வாஸந்திகையை அவனையே விவாகம் செய்துகொள்ளும்படி செய்விப்பதாகச் சொல்லி ஏமாற்றி, என்னுடைய காரியத்தை முடித்துக்கொண்டு, பிறகு அவனை இந்நாட்டைவிட்டு ஓட்டி விடுகிறேன் அல்லது உயிரை இழக்கும்படி செய்கின்றேன். ஆம்! இதுவே நல்லயோசனை!—

ரணகேஸரி வருகின்றான்.

ஓஹோ! வாஸந்திகா மனோஹரரே! வாரும்.

ரண. என்ன நண்பரே, ஏளனம் செய்கின்றீர்? என்ன செய்துகொண்டிருக்கிறீர் இவ்விடத்தில்?

குரு. உம்மைத்தான் எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். உம்மை நான் தேடிப்பாராத இடம் இல்லை. ஏது இப்பொழுது அரண்மனை உத்தியோகமே சரியாயிருக்கின்றதுபோலும்?

ரண. மஹாராணி இப்பொழுது தனியாயிருக்கிறபடியால் அரண்மனையைச் சுற்றி தக்க காவல் வைக்கும்படி மந்திரியார் கட்டளையிட்டிருக்கின்றார். அது செய்து கொண்டிருந்ததில் இத்தனை காலமாயிற்று.

குரு உமக்கென்னகுறை இனி? பிடித்தாலும் புளியங்கிளையைப் பிடித்தீரையா! அப்படியல்லவோ இருக்கவேண்டும்!

ரண. ஐயா, தாம் கூறுவது இன்னதென்று எனக்குப் புலப் படவில்லையே! என்ன விசேஷம்?

குரு. புலப்படுமா உமக்கிப்பொழுது? நாளை மஹாராஜா ஆவீரானால் எல்லாம் மறந்து விடமாட்டீரா? அப்பொழுது என்னை சிறிதாவது ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

ரண. என்ன நண்பரே, முதலில், 'வாஸந்திகா மனோஹர' னென்றீர்! இப்பொழுது 'மஹாராஜா' என்கிறீர்! என்ன விசேஷம்?

குரு. என்ன விசேஷம்! விசேஷத்தைச் சொல்லவேண்டுமா?—வேண்டாம். நீர் ஒப்புக்கொள்ளமாட்டீர்! அதிருக்கட்டும். வாஸந்திகை என்னமாயிருக்கின்றாள் இப்பொழுது?

ரண. ஐயா, இராஜகுமாரத்தியைப்பற்றி எனக்கென்னதெரியும்? நானோ கேவலம் ஒரு வேலையாள். மஹாராணியின் தோழியைக் கேட்டால் தெரியவரும்.

குரு. இப்பொழுதே பொய்பேச ஆரம்பித்து விட்டீரே! நாளை என்னை மறந்துவிடுவீர் என்பதற்கு என்ன சந்தேகம்? மஹாராணியோ உம்மை விவாகம் செய்து கொள்ளப்போகிறதாக அரண்மனையில் பேசிக்கொள்ளுகிறார்கள். நீரென்னமோ என்னிடம் ஒளிக்கப்பார்க்கின்றீர். என்ன சமாசாரம்? என்னிடங் கூறலாகாதா?

ரண. இதென்ன ஆச்சரியம்! என்னையாவது இராஜகுமாரி விவாகஞ் செய்து கொள்ளப் போகிறதாவது! யாராவது இதைக்கேட்டாலும் நகைப்பார்களே! உமக்கு யார் சொன்னது இவ்வாறு? இது தவறான சமாசாரம். மஹாராணியோ தந்தையை இழந்ததற்காக மிகவுந்

துயரமுற்றிருக்கிறார்கள். ஒருகால் விவாகஞ் செய்து கொள்ளுவதாயிருந்தாலும் அத்தியந்த நண்பராகிய உம்மை விட்டுவிட்டு என்னை மணப்பார்களென்பது ஆச்சரியமாயிருக்கின்றது. நானென்னகேவலம் ஒரு—

குரு. யாரிடம் சொல்லுகிறீர் இந்த வார்த்தை? எனக்கெல்லாந்தெரியும்? ஏன் ஒளிக்கின்றீர்? உம்முடைய அழகிற்கும அம்மாதினழகுக்கும் ஒத்திருக்கின்றது! சத்தியமாகச்சொல்லும், உமக்கு அந்த எண்ணம் உண்டா இல்லையா?

ரண. [தலைகுனிந்து] உம்!

குரு. உண்டா இல்லையா? கூறும்முண்மையை.

ரண. உம்! ஆம்! உண்மைதான். அதனாலென்ன பிரயோஜனம்? ஒரு மதுரமான கனியிருந்தால் அதையடைய யார்தான் ஆசைப்படார்?

குரு. அக்கனிதான் உம்முடைய கையிலிருக்கின்றதே! இனி யோசனை யென்ன?

ரண. என் உயிர் நண்பரே, நான் எப்பொழுதாவது பொய் பேசினதுண்டா? என்னை நம்பும். நீர் கேள்விப்பட்டதெல்லாம் பொய். நானென்ன அவ்வளவு கொடுத்து வைத்தவனோ?

குரு. அப்படியா சமாசாரம்? நாளையே உமக்கும் மஹாராணிக்கும் விவாகமானால் எனக்கென்ன தருவீர்?

ரண. அப்படிப்பட்ட சாம்ராஜ்யம் எனக்குக் கிட்டுமாகில் என் உயிரை வேண்டுமென்றாலுந் தருகின்றேன்.

குரு. உம்—அப்படி எனக்கொன்றும் வேண்டாம். நீர் நூறாண்டு காலம் சுகமாய் வாழ்ந்திரும். எனக்கு வேறென்ன தருவீர் சொல்லும் கேட்போம்?

ரண. வேண்டுமென்றால் அப்பொழுது இவ்விராஜ்யத்தைத் தந்து விடுகின்றேன் உமக்கு.

குரு. இது உண்மைதானா ?

ரண. இது சத்தியந்தான்.

குரு. ஆனால் நான் இப்பொழுதேசென்று மஹாராணியைச் சம்மதிக்கச்செய்து உம்மை விவாகஞ் செய்துகொள்ளும்படி செய்கின்றேன். தாம் சொன்னது மாத்திரம் ஞாபகமிருக்குமா ?

ரண. உப்—முடவன் கொம்புத்தேனுக் காசைப்பட்டாற் போல்தான! நண்பரே, இராஜகுமாரி தம்முடைய வார்த்தையைக் கேளாவிடில் பிறகு என்னசெய்வீர் ?

குரு. அதற்குத்தான் உமது ஒத்தாசைவேண்டும். இந்நாட்டிலுள்ள சேனைகளையெல்லாம் உம்முடைய கையிலடக்கஞ்செய்து வைத்துக்கொள்ளவேண்டும். ஒரு சமயம் இராஜகுமாரி மறுத்துவிட்டால் அவளை அரண்மனையில் காவலில்வைத்து அவள் பெயரைக்கொண்டு நாம் இராஜ்ய பரிபாலனம் செய்துகொண்டு வருவோமாகில், பெண்மனம் பேதை, அவள் எப்படியும் நமக்கிசைவாளென்பதற்குத் தடையில்லை.

ரண. ஐயா, இது நமக்கடுக்குமா! இது நியாயமா!

குரு. என்ன ரணகேஸரி, இராஜகுமாரிக்கு உம்மை விவாகஞ் செய்துகொள்ளயாதொருதடையுமிராது; அது எனக்குத் தெரியும். அப்படி ஒருவேளைமாட்டேனென்றாலல்லவோ நாம் நினைத்தபிரகாரஞ் செய்யவேண்டும்.

ரண. நண்பரே, எனக்கு இராஜ்யமே வேண்டாம். நீரேவைத்துக்கொள்ளும். எப்படியாவது நான் அப்பத்மலோசனியை அடைந்தால் அது போதுமெனக்கு.

குரு. அதற்கென்ன? அப்படியே செய்கின்றேன். தாம் சென்று சேனையைத் தம்முடைய சொற்படி நடக்கும்படிசெய்து வைத்துக்கொள்ளும்.

ரண ஐயா, இதைப்பற்றி யோசிக்க வேண்டாம். சேனைகளெல்லாம் உமது கையிலிருப்பதாகவே எண்ணிக்கொள்ளும். ஜாக்கிரதை! நான் போய்வருகின்றேன்.

குரு. அப்படியே. [ரணகேஸரி போகின்றான்.] இதுதான் நல்ல சமயம்! இப்பேதையை ஏமாற்றிவிட்டோம்! பெண்ணாசைக்குட்பட்டுப் பேயைப்போல் பிதற்றுகின்றான். இவனை என் கருவியாக வைத்துக்கொண்டே என் எண்ணங்களையெல்லாம் முடித்துக்கொள்ள வேண்டும். யார் வருகின்றது? ஓஹோ வாஸந்திகையின் தோழி கமலா. இவளையும் கைவசப்படுத்திக்கொள்ள வேண்டும். ஆ! கமலா! எங்கே போகின்றாய்?

கமலினி வருகின்றாள்.

கம. மஹாராணியிடம் போகின்றேன்.

குரு. அதிருக்கட்டும். மஹாராணிக்கு விவாகமாமே! யார் மீது காதல்கொண்டிருக்கிறாள், தெரியுமா உனக்கு?

கம. பிரபு, மஹாராணியவர்கள் யார்மீது காதல் கொண்டிருக்கிறார்களோ? என்னிடம் ஒன்றும் சொல்லவில்லையே.

குரு. உன்னிடம் சொன்னால் எனக்குத் தெரிவிக்கின்றாயா?

கம. அவ்வாறு செய்வது தர்மமல்லவே பிரபு.

குரு. இதோ இந்த இரத்தின ஹாரத்தை வைத்துக்கொள். இன்னும் வேண்டிய பொருள் கொடுக்கின்றேன். எப்படியாவது இராஜகுமாரி என்னை மணஞ் செய்துகொள்ளும்படி செய்யவேண்டும் உனக்கு நன்மையுண்டு.

கம. பிரபு, இதெல்லாம் எனக்கென்னத்திற்கு? தம்முடைய தயை இருந்தால் போதும். தமது வார்த்தைக்குக் குறைக்குண்டோ?

குரு. அப்படியல்ல. இதை வைத்துக்கொள். இன்னும் வேண்டியது தருகிறேன். [இரத்னஹாரத்தை குரூரகர்மன் கொடுக்க அதை கமலினி வாங்கிக் கொள்ளுகின்றாள்.] நான் போய்வருகின்றேன் கமலா! நான் சொன்னது ஞாபகமிருக்கட்டும். [போகின்றான்.]

கம. இன்று நான் தூங்கி யெழுந்திருந்த வேளை நல்ல வேளை! எனக்கு எல்லாம் நன்மையே சம்பவிக்கின்றது! மனம் கூசாது உண்மையை வெளியிட்டார்! பாவம்! என்றால் என்ன முடியும்? [யோசித்து.] அதிருக்கட்டும், வாஸந்திகாதேவி தான் ஏன் இவரை விவாகம் செய்துகொள்ளலாகாது? அழகுடையவர்! நல்ல வித்துவான்! அதுவும் தவிர மந்திரியின் குமாரர்! இவைகளைவிட வேறு என்ன சிலாக்கியமான குணங்கள் வேண்டும்? நல்லதிருக்கட்டும்! [போகின்றாள்.]

---

# முதல் அங்கம்.

## மூன்றாவது களம்.

இடம்:—ஹஸ்தினபுரத்து அரண்மனையைச்சார்ந்த நந்தவனம்.

காலம்:—சந்திரோதயமாலை.

வாஸந்திகை நொந்த மனதுடன் ஒரு பளிங்குக்கல்மீது உட்கார்ந்திருக்கின்றாள். கமலினி தேறுதல் சொல்லுகின்றாள்.

ம அம்மணி, நடந்துபோன விஷயத்தைப்பற்றி எண்ணியெண்ணி வருந்துவதில் என்ன பயன்? தம்மு

டைய தேகம் நாளுக்குநாள் இளைத்துப்போகின்றதே! நாடாளுந் தொழிலைக் கைகொண்ட தாங்கள் இவ்வாறு வருந்துவது சரியன்று. வருவது வந்தே தீரும்.

வா. கமலா, நீ சொல்லுவதெல்லாம் உண்மையே. ஆயினும் என்ன செய்வது? நான் எங்கிருந்தாலும் என்ன செய்தாலும் என் தந்தையின் ஞாபகமே வருகின்றது. இந்த நந்தவனத்திலாவது சற்று ஞாபகமற்றிருப்போமென்றாலோ அப்படியிருக்க என்னால் முடியவில்லை. என்ன செய்வேன்?

கம. அம்மணி, தாம் தனியாய் அரண்மனையிலிருப்பதால் இந்த எண்ணங்களெல்லாம் தமக்கு அடிக்கடி உண்டாகின்றன.

வா. ஆம், கமலா. பகலில் பொழுதை எப்படியோ போக்கிவிடுகின்றேன். இரவெல்லாம் கண்ணீர் சிந்திய வண்ணமே இருக்கின்றேன். முன் ஜென்மத்தில் நான் எவருக்கு என்ன தீங்கு செய்தேனோ? அப்பாவம் என்னை இந்த ஸ்திதிக்குக் கொண்டுவந்துவிட்டது.

கம. இத்துயரம் நீங்கும்படியான மார்க்கமொன்றிருக்கின்றது அம்மணி.

வா. என்ன? சொல்கேட்போம்?

கம. இப்பொழுதே தக்கவரை மணம் செய்துகொண்டால் தம்முடைய துயரமெல்லாம் நீங்கும்.

வா. கமலா, என்னுடைய விவாக மஹோத்ஸவத்தைக் கண்குளிரப் பார்க்கவேண்டுமென்றிருந்த என் தந்தையே இறந்துவிட்டார். இனிநான் விவாகம்செய்து கொள்ளுவானேன்? இப்படி கன்னிகையா யிருந்துவிடுவதே நலமெனத்தோன்றுகின்றது.

கம. தேவி, தாம் அவ்வாறு சொல்லப்படாது. உலகில் ஒருவர் உயிருடனிருக்கும்பொழுது பெற்றோர் இறப்பது ஸகஜந்தான். அப்படி இறந்தவர்களின் பொருட்டு மக்கள் தங்களுக்குரிய இன்பசுகங்களை யெல்லாம் விட்டு விடுவதை நான் கேட்டதேயில்லை. தாம் கன்னிகையாகவே இருந்து இவ்விராஜ்ஜியத்தைப் பரிபாலித்து வந்தால் தமக்குப்பின் இதை யாள்பவர் யார்? அதை யோசிக்க வில்லையோ? அம்மணி, அது போனால் போகட்டும். தாமோ தமது பிதாவுக்கு அருமைப் புதல்வி. ஒருவருக்குப் புத்திரனில்லாமல் புத்திரிமட்டு மிருக்கும்பக்ஷத்தில் அப்புத்திரி வயற்றி லுதிக்கும் புத்திரனால் செய்யப்படும் திலதர்ப்பணங்கள் அவனை யடைவதாகச் சொல்லுவார்கள். அப்படியிருக்க கன்னிகையாகவே தாமிருந்துவிடும் பக்ஷத்தில் தம்முடைய பிதாவின் லோகாந்தரகதி என்னவாவது? இதையாவது தாம் யோசிக்கவேண்டாமா?

வா. ஆம், இது வாஸ்தவந்தான். ஆயினும் எனக்குதவுவார் யாரிருக்கின்றார்கள்?—

கம. அம்மணி, தாமென்ன இப்படி கூறுகின்றீர்? உலகிலுள்ள இராஜகுமாரர்களின் படங்களைவரவழைத்துப் பார்த்தால் போகின்றது. மேலும் உம்முடைய தந்தையின் அத்யந்த நண்பராகிய விராட பூபதி வீரசேனருடைய புதல்வர் சுகுமாரரிருக்கின்றார். அவ்வளவென்ன? நம்முடைய மந்திரியின் மைந்தர் ஸ்ரீதரசர்மர் இருக்கின்றாரே அவரை ஏன் தாம் விவாகஞ் செய்துகொள்ளலாகாது?

வா. நாங்களிருவரும் சிறு வயது முதல் ஒன்றாய்க் கற்று வளர்ந்தவர்கள். அவனை என் சகோதர னென்றே

எண்ணி யிருக்கின்றேன். நான் அவனை விவாகஞ் செய்து கொள்ளுவது நியாயமல்ல. அவன் இச்சங்கதியைக் கேட்டாலும் கோபம் கொள்வானென்பதற்குச் சந்தேகமில்லை.

கம. அம்மணி. அவர்தான் தம்மை விவாகம் செய்துகொள்ளப்போகிறதாக ஒரு வதந்தி யிருக்கின்றதே.

வா. என்ன! அது நம்பக்கூடியதல்ல. இல்லை. அது உண்மை யன்று. நான் அதற்கு உடன்படேன்.

ஒரு சேவகன் வருகின்றான்.

சேவ. தேவி, கமலினியம்மாளை மந்திரியவர்கள் அழைத்துவரச்சொன்னார்கள்.

வா. அப்படியா? கமலா, சீக்கிரம் போய்வா. லதாக்கிருஹத்தில் லலிதை யிருக்கின்றாள்; அவளை அனுப்பிவிட்டுப்போ.

கம. அப்படியே. [போகிறாள்.]

வா. யோசிக்குமிடத்தில் கமலா சொல்வது எல்லாமும் வாஸ்தவமே. ஆயினும் குரூரகர்மனை விவாகஞ் செய்துகொள்ளும்படி இவள் சொல்லுவானேன்?—மந்திரி என்ன காரணத்திற்காக கமலாவை அழைத்திருக்கக்கூடும்?—யார் வருகின்றது?—ஓ! குரூரகர்மா!

குரூரகர்மன் வருகின்றான்.

குரு. வாஸந்திகா—மஹாராணி, என்ன, தனியாய் நந்தனவனத்திலிருக்கின்றீர்? [தனக்குள்] இதுதான் நல்ல சமயம்.

வா. அப்பா, குரூரகர்மா, எங்கே வந்தாய்?

குரு. நீங்களோ இப்பொழுது மஹாராணியாய்விட்டீர்கள். நான் இனி உங்களை என்னவென்றழைப்பது? 'மஹா

ராணி' யென்றழைப்பதா? அல்லது 'வாஸந்திகா' வென்று?

வா. அப்பா, நீயும் நானும் சிறுவயது முதல் ஒன்றாய் வளர்ந்துவந்தவர்கள். நானுன்னைச் சகோதரனென்றே எண்ணி யிருக்கின்றேன். நீ உன்னிஷ்டப்பிரகாரமே என்னை அழைக்கலாம்.—அதிருக்கட்டும், எங்கே வந்தாய் நீ?

குரு. வஸந்தகாலமானபடியால் சற்று நந்தன வனத்தில் உலாவிப் போகலாமென்று வந்தேன்.—எங்கே உன் தோழியைக் காணோம்.

வா. கமலாவா! உன் தந்தை அழைத்ததாக சேவகன்வந்து சொன்னான். அதற்காகத்தான் போனாள்? வந்துவிடு வாள் சீக்கிரம்.

குரு. உம்—உம்—வாஸந்திகா, நான் ஒரு சமாசாரம் கேள் விப்பட்டேன், அது உண்மைதானோ? ஆயினும் நான் நம்பவில்லை அதை.

வா. என்ன விஷயம்?

குரு. நீ யென்னவோ ரணகேஸரியை விவாகம் செய்து கொள்ளப்போகிறதாக வதந்தி, இது உண்மைதானோ?

வா. என்ன! இதென்ன ஆச்சரியம்! பிதா இறந்து ஒரு மாதம் கூட ஆகவில்லை. இதற்குள் நான் விவாகஞ் செய்துகொள்ளுவதாவது? அப்படித்தானிருந்தாலும் போயும் போய் சேனாதிபதி ரணகேஸரியையா நான் விவாகஞ் செய்து கொள்வேன்? இதை என்னிடம் கேட்கவும் உனக்குத் தோன்றிற்றே!

குரு. வாஸந்திகா, என்மீது கோபங்கொள்ளவேண்டாம். நான் கேள்விப்பட்டதை உன்னைக் கேட்டேன். நீ

அவனை விவாகஞ் செய்துகொள்ள மாட்டாயென்று எனக்கு நன்றாகத் தெரியும். ஆயினும் உன்னுடைய அபிப்பிராயத்தைத்தெரிந்துகொண்டேன். அவ்வளவு தான். அவனென்ன அழகிற் சிறந்தவனோ அல்லது படிப்பில் தேர்ந்தவனோ நம்மைப்போல்? அதிருக் கட்டும். விவாகம் எப்பொழுது? அதையாவது என்னிடங் கூறலாகாதா?

வா. நான் விவாகம் செய்து கொள்ளுவதாக எண்ணங் கொண்டிருக்கவில்லை.—அதிருக்கட்டும். உனக்கெப் பொழுது விவாகம்?

குரு. உனக்கெப்பொழுதோ அப்பொழுதேதானெனக்கும்.

வா. அதென்ன அப்படி கூறுகின்றாய்? ஆனால் உன் பிதா உன் விவாகத்தைப்பற்றி எனக்கொன்றும் தெரிவிக்க வில்லையே.

குரு. சொல்லி என்ன பிரயோஜனம்?

வா. என்ன அப்படி யுரைக்கின்றாய்? என்னாலான உதவி செய்யமாட்டேனா உனக்கு? உன் விவாகத்தை என தரண்மனையிலேயே நடத்துவேனே!

குரு. வாஸந்திகா, உனது அரண்மனையில்தான் நடக்கப் போகிறது. நீ மறுத்தாலுங்கூட நான் விட்டுவிடப் போகிறேனோ? பலவந்தஞ் செய்தாவது உன்னிடமே விவாகஞ் செய்துகொள்ளப்போகிறேன். அதற்குச் சந்தேகமில்லை.

வா. அப்பா, உனக்குச்செய்யும் நற்காரியத்தை நான் தடுப் பேனோ? அப்படி யொருநாளு மெண்ணாதே.—அதி ருக்கட்டும், யாருடைய பெண்?

குரு. நான் மாத்திரம் அதைச் சொல்லுவேனே? நீ உன் காதலன் பெயரைக் கூறமாட்டேனென்கிறாயே.

வா. நான் விவாகஞ் செய்துகொள்ளுவதே நிச்சயமில்லையே. அப்படியிருக்க நான் எப்படி எனது காதலரின் பெயர் கூறமுடியும்?

குரு. ஏன்? உன்னைவிட அழகிற் சிறந்தவராயும் படிப்பில் தேர்ந்தவராயும் ஒரு புருஷன் இவ்வுலகில்கிடைப்பது அரிதென்று விவாகமென்கிற ஆசையையே விட்டு விடப்போகிறாயோ?

வா. உம்—உன்னுடைய காதலியார்? அவள் பெயரென்ன?

குரு. வாஸந்திகா, உனக்கு சமானமாய்ப் படிப்பில் தேர்ந்திருப்பவன்—உம்—அதிருக்கட்டும்—என் காதலியின் பெயரையல்லவோ கேட்டாய்? அவ்விந்துமுகியின் பெயரும் உன்பெயரே! உன்னைப்பார்த்தால் அவளைப் பார்க்கவேண்டியதே இல்லை. ஒரு சமயம் யாராவது அக்கன்னிகையைப் பார்ப்பார்களாகில் நீயென்றே எண்ணுவார்கள்.

வா. என்ன? அப்படியானல் நான் அவளை அவசியம்பார்க்க வேண்டும். அவள் யார்? எங்கிருக்கின்றாள் சொல்.

குரு மின்னல்கொடியைப்போல் இப்பூந்தோட்டத்தில்—இப்பொழுது இருக்கின்றாளே—எனக்கு முன்—அவள்தான்.

வா. [திடுக்கிட்டு] என்ன! இதென்னவார்த்தை? இது உனக்குத்தகுமோ?

குரு. வாஸந்திகா, நான்சொல்லியதில் தவறென்றுமில்லையே. சிறுவயதுமுதல் உன்மீது நான் கொண்டிருக்கின்ற காதலை இன்று வெளியிட்டேன். அவ்வளவே—

வா. குரூரசர்மா, இந்த வார்த்தை உனக்குத் தகுமோ? நான் உன்னைச் சகோதரனென் றெண்ணியிருக்கின்றேனே! இது தர்மமா? இந்த எண்ணத்தை விட்டுவிடு. வேறெந்தப் பெண்ணையாவது மணஞ் செய்துகொண்டு புத்திரசந்தானம்பெற்று நீடூழிகாலம் வாழ்ந்திருப்பாய்.

குரூ. நீ அவ்வாறு சொல்லாதே. எவ்விஷயத்திலும் உனக்குச் சமானமானவன் நான்தான். ஆகையால் கண்ணே, என்னை விவாகஞ் செய்துகொள்ளுவதாய் ஒரு வார்த்தை சொல்.

வா. ஏ! குரூரசர்மா! என்ன முன்பின் யோசிக்காமல் பேசுகின்றாய்? உன்னுடைய குணம் இப்படி மாறிவிடும் என்று நான் கனவிலும் நினைத்திருக்கவில்லையே! சீ! உன் முகத்தைப் பார்த்தலும் தவறு.

[வாஸந்திகைபோகப் பிரயத்தனிக்க குரூரசர்மன் அவளைத் தடுக்கின்றான்.]

குரூ. கண்ணே, என்னைத் தனியாய் விட்டுச்செல்வது உனக்குத் தர்மமா? பாவி மாரன் என்னை மிகவும் வருத்துகின்றான்? எனதுயிர் உன்னிடமிருக்கின்றது. என்னை ஈடேற்றமாட்டாயோ? கண்ணே, கண்ணே!

[வாஸந்திகைமுன் முழந்தாளிடுகின்றான்.]

வா. என்ன கெட்ட எண்ணமுள்ளவன் நீ? நான் தனியாய் அகப்பட்டுக்கொண்டேனென்று என்னை நிர்ப்பந்திக்கின்றாயோ? வேண்டாம். ஜாக்கிரதை! நான் மஹாராணியென்பதை மறந்து வாயில் வந்தது பேசுகின்றாய்! ஜாக்கிரதை!

குரு. என் கண்மணி, இன்று நீ என்னாசையைப் பூர்த்தி செய்தாலொழிய உன்னை நான் விடப்போகிறதில்லை. இனி தாளமாட்டேன். கண்ணே! வாஸந்திகா! ஏன் யோசிக்கின்றாய்? கருணை செய்யலாகாதா?

வா. அடா! உனக்கிவ்வளவு எண்ணமா? உன்னை நான் விவாகஞ் செய்யவேமாட்டேன். இது சத்தியம்! சீ! என் முன் நில்லாதே! போ.

குரு. என் கனிரசமே! நான் உன்னை விடப்போகிறதில்லை. என்னாசைதீர ஒரு முத்தம்கொடுக்கமாட்டாயா?

[முத்தமிட அருகில் செல்லுகின்றான்.]

வா. சீ! சண்டாளா! தூர நில்.—ஐயோ! கமலா! லலிதா!—இவர்களும் இன்னமும் வரவில்லையே? தெய்வமே! நான் ஏன் இவ்விடத்திற்கு வந்தேன்?—அடா மித்திரத்துரோகி! நீ என்ன எண்ணங்கொண்டிருக்கிறாய்? நீ கற்றகல்வியெல்லாம் இதற்குத்தானோ? சீ! சீ! நீ மனிதனல்ல! மரியாதை தவறாதே! வழி விடுகின்றாயா இல்லையா? இல்லாவிடில் உன்னைச் சிறையிலிடுவேன். ஜாக்கிரதை!

குரு. வாஸந்திகா! என்ன சொல்லினை, என்ன சொல்லினை? என்னையோ சிறையிலிடப்போகின்றாய் நீ? உன்னுடைய அகங்காரத்தையெல்லாம் அரைக்ஷணத்திலடக்கிறேன் பார்! நீயிருக்கும் ஸ்திதியைப்பார்த்து நாங்கள் பரிதாபப்பட்டு மஹாராணியாக்கினதாலல்லவா உன்னை இவ்வளவு தூரம் பேசச்செய்தது? உன்னை அடக்கும் விதத்திலடக்கின்றேன்! நல்லது! இக்க்ஷணமே உன்னைச்சிறையிலிடுகின்றேன்பார்! உனது கர்வத்தை யடக்கி உன்னை நான் விவாகஞ் செய்துகொள்ளா

விட்டால் என்பெயர் குரூரகர்மனன்று. [குரூரகர்மன் தன் தாரையையூத நான்கு சேனாவீரர்வந்து வாஸந்திகையைச்சுற்றி நிற்கின்றார்கள்.] வீரர்களே ! ஜாக்கிரதையாய் ஒருவருமறியாதபடி இவளைக் கொண்டுபோய் புதிதாய் ஏற்படுத்தப்பட்ட காராக்கிருஹத்தில் அடைத்து வையுங்கள். தெரிந்ததா ? இவ்விஷயம் யாருக்காவது தெரியப்போகின்றது. தெரிந்தால் உங்கள் தலை உங்கள் உடலில் இருக்கமாட்டாதென்றறியுங்கள். சரி, போங்கள்.

சே.வீ. அம்மணி, வாருங்கள் போவோம்.

வா. அடே ! என்ன இது ? என்னை யாரென்று அறியீர்களா ?

கு. சீ ! இனி ஒருவார்த்தை பேசுவாயாகில் உன் உயிர் போய்விடும். ஜாக்கிரதை ! பேசாமல் நட.—

வா. உப்—விதியே !—விதியே !

[சேனைவீரர்கள் வாஸந்திகையை அழைத்துச் செல்கிறார்கள்.]

கு. உப்—என்ன கொடியவன் நான் !—சீ! இச்சமயம் பச்சாத்தாபப்படலாகாது. இனி எல்லாம் சரியாய்விடும். இவளை நமது கைவசப்படுத்திக்கொள்வது இனி அசாத்தியமன்று. இப்பொழுதே ரணகேஸரியிடம் சென்று இனி இராஜ்ஜியத்தைப் பெறும்படியான மார்க்கத்தைத் தேடவேண்டும். [போகின்றான்.]

---

# இரண்டாவது அங்கம்.

## முதற் களம்.

இடம் :—ரணகேஸரியின் மனை. காலம் :—மாலை.

யோசித்தவண்ணம் ரணகேஸரி உலாவிக்கொண்டிருக்கிறான்.

ரண. உம். அப்படி நடக்கும்பக்ஷத்தில் நான் எவ்வளவு பாக்கியசாலியாயிருப்பேன்? ஆ கண்ணே, வாஸந்திகா, உன் சந்திரவதனத்தை மறுபடியும் காண நான் கொடுத்துவைக்கவில்லையே. அன்று நான் உன்னைக் கண்டது முதல் அக்கினியில் பட்ட மெழுகுபோல் அங்கமெல்லா முருகுகின்றேன். உன் முகத்தை மறுபடி காணவேண்டுமென்று நீ இருக்கும் இடங்களில் வந்து தேடியும் காணமுடியாது போயிற்று. மங்கையர்க்கரசி, நீ என்னை விவாகஞ்செய்துகொள்ளாதுபோனாலும்போகட்டும். எப்பொழுதும் நான் உன் அருகில் இருந்து நீ இட்டவேலையைச் செய்துகொண்டிருக்கப் பெறுவேனாயின் அதுவே போதுமெனக்கு. உம்—எப்படியாவது உன்னைச்சரிப்படுத்திவருவதாக சொல்லிச் சென்ற குரூரகர்மன் இதுவரையிலும் வரக்காணோம். ஒருகால் காரியம் முடிந்ததோ அல்லது முடியவில்லையோ? அவன் வார்த்தையை நம்பி நகரத்திலுள்ள சேனைகளையெல்லாம் அவன் உத்தரவுபடி நடக்கும்படி கட்டளை செய்திருக்கின்றேன். ஆ! இப்படி செய்ததற்கு என்ன கஷ்டங்கள் நேரிட்டன.

கையிலோர் நிருபத்துடன் குரூரகர்மன் வருகிறான்.

குரூ. ஐயா, ரணகேஸரி, எல்லாம் முடிந்தது. இனி உம்மால்தான் தாமதம். என்ன யோசித்துக்கொண்டிருக்கின்றீர்?

ரண. ஒன்றுமில்லை. என்னுயிர் நண்பரே, உம்மைத் தோழனாகப்பெற்ற எனக்கு என்ன குறை?—அதிருக்கட்டும். உம்—இராஜகுமாரி சம்மதித்துவிட்டாளா?

குரு. சந்தேகமென்ன? சம்மதம் பெறுமளவுங்கூட இருப்பேனோ? நீரோ எனக்கு அத்யந்த நண்பர். உம்முடைய கோரிக்கையை நிறைவேற்றுகிறேனென்று சொல்லிவிட்டு அதினின்றுந் தவறுவேனோ நான்?—அதிருக்கட்டும். சேனைகளென்னவாயிருக்கின்றன?

ரண. நண்பரே, அதைப்பற்றி யோசிக்கவேண்டாம். எல்லாம் சித்தமாயிருக்கின்றன. சகல சேனைகளேயும் தம்முடைய ஆணைப்படி நடக்கும்படி கட்டளை செய்துவிட்டேன்.—உம்—இராஜகுமாரியை நான் எப்பொழுது காணலாம்?

குரு மித்திரா, அவசரம் வேண்டாம். இராஜகுமாரியை நேற்றுகண்டு பேசினதில் முதலில் அவள் என்வேண்டுகோளுக்கு இசையவில்லை. இப்போது அவளைச் சிறையிலிட்டிருக்கின்றேன்.

ரண. என்ன! என்ன!

குரு. பொறும் சொல்லுகின்றேன். இன்று காலை அவளுடைய தோழியை விசாரித்ததில் அவள் நமது வழிக்கு வருவாள்போ லிருக்கிறதாம். ஆகையால் நாம் இப்பொழுது அவசரப்படலாகாது. எப்படியும் நமது வசமிருக்கின்றாள். இனி யோசிக்கவேண்டியதில்லை.

ரண. இவ்விஷயம் உம்முடைய தந்தைக்குத் தெரியும் பக்ஷத்தில் நம்மைத் தண்டிக்கமாட்டாரா?

குரு. இக்காரியம் ஒன்றும் என் பிதாவுக்குத் தெரியாது. மஹாராஜாவின் உத்தரகிரியைகள் விஷயமாய் நொந்த

சிரமத்தால் என் தந்தைக்குத் தேகசௌக்கியமில்லை. பத்துநாட்களாய்ப் படுத்தபடுக்கையிலிருக்கின்றார். மேலும் அவரைப்பற்றி ஒன்றும் யோசிக்கவேண்டியதில்லை. நான் சரிப்படுத்திவிடுகிறேன் அவரை. நீர்மாத்திரம் சேனைகளை என் உத்தரவுபடி நடக்கும்படி செய்துவிடும்.

ரண. எனதுயிர் நண்பரே, உமது வசந்தானிருக்கின்றன சேனைகளெல்லாம்.

குரு. ஆனால் தாம் உடனே இந்த நிருபத்தில் முத்திரை வைத்து நாடுமுழுதும் பிரசுரம் செய்யும்படியாய்க் கட்டளையிடும்.

ரண. இதிலென்ன எழுதியிருக்கின்றது?

குரு. வேறொன்றுமில்லை. மஹாராணியும் மந்திரியவர்களும் அசௌக்கியமாயிருக்குங்காரணத்தால் மந்திரி குமாரராகிய குருநாகர்மர் இராஜரீகத்தைநடத்துவாரென்பது தான் அவர்கள் முத்திரைகளையும் வைத்திருக்கிறேன்.

ரண. என்ன?

குரு. இப்பொழுது அதிகம் யோசிப்பதற்கிடமில்லை. நமதெண்ணம் நிறைவேறவேண்டும். தாமதிக்கலாகாது. முத்திரையிடும். நான் இராஜ்ஜியத்தைவிரும்பி இவைகளையெல்லாம் செய்கிறேனென்று நீர் எண்ணுவதாயிருந்தால் நான் இந்தக்ஷணமே விட்டுவிடுகிறேன்.

ரண. சீ! சீ! நண்பரே, நான் அப்படி உம்மை எண்ணுவேனோ?

குரு. நீர் வாஸந்திகையை மணந்து இன்புற்றிருக்கப் பார்க்க வேண்டும். அதுதான் எனது விருப்பம்.

[நிருபத்தில் முத்திரையிடுகின்றான்.]

ரண. நல்லது—யாரங்கே?

ஒரு சேவகன் வருகின்றான்.

இதோ இப்பத்திரிகையில்கண்ட விஷயத்தை நகரம் முழுதும் பிரகாரஞ் செய்துவிட்டுவா—போ.

சேவ. அப்படியே— [போகின்றான்.]

ரண. நண்பரே, என்னாலாகவேண்டிய விஷயம் ஏதாவதிருக்கின்றதோ இன்னும்?

குரு. உம்—ஒன்றுமில்லை. [சற்றுயோசித்து] ஆ! இப்பொழுதுதான் ஞாபகம் வந்தது. ஒருகால் நகரமாந்தர்கள் இச்சேதி கேட்டவுடன் அரண்மனைக்கு வந்தாலும் வருவார்கள். ஆகையால் சில சேனைவீரர்களை அரண்மனையில் மறைத்து வைக்கவேண்டும். உடனே தாம் அதற்கு ஏற்பாடு செய்யும். நான் அதற்குள்ளாகச் சென்று இராஜகுமாரியின் மனது எப்படியிருக்கிறதென்று தெரிந்துகொண்டுவருகிறேன். உம்-வாஸந்திகை மனோகரரே! நீர் செய்யவேண்டியதைச் செய்யும்.

ரண. ஹஸ்திநபுரமன்னரே! போய்வாரும். [குரூரகர்மன் போகின்றான்.] நேரமாகின்றது, குரூரகர்மன் கூறியபடி உடனே சேனையைச் சித்தம்செய்து அனுப்பவேண்டும்— [விரைவாகப் போகின்றான்.]

---

# இரண்டாவது அங்கம்.

## இரண்டாங் களம்.

இடம்:—அரண்மனையைச்சார்ந்த ஓர் சிறைச்சாலை.

காலம்:—மாலை.

வாஸந்திகை தன் விதியை நினைத்து வருந்துகின்றாள்.

இரண்டு காவற்காரர்கள் சிறைச்சாலைக்கு வெளியே காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

வா. ஐயோ! என்னைப்போன்ற துர்ப்பாக்கியமுள்ளவரிருக்கிறார்களோ உலகில்? மஹாராணியானதும் காராக்கிருஹத்திலிருக்கின்றேனே! என்னைப் பார்த்துப் பரிதாபப்படுபவர்கள்கூட ஒருவருமில்லையே! நான் எவருடன் என் குறைகளைச் சொல்வது? அடா பாதகா! குரூரகர்மா! உன் தங்கைபோல் உன்னுடன் கூட வளர்ந்த என்னைக் காவலில் வைக்க உனக்கு எப்படி மனம் துணிந்தது? இக்கொடிய காரியத்தைச் செய்வதற்கோ உன்னை நான் என் சகோதரனைப்போல் பாவித்துவந்தேன்? அடாபாவி? என் நெஞ்சம் எரிகின்றதே! ஆ! தெய்வமே! எனக்கேன் இந்தவிதி விதித்தாய்? மானம் இழந்து வாழ்வதைவிட மடிவதுமேலல்லவா? அடா பாதகா! என்னைக் கொன்றுவிட்டிருக்கலாகாதா? ஐயோ! இந்தச் சிறையிற்கிடந்து ஊண் உறக்கம் ஒன்றும் இல்லாமல் சோருகின்றேனே. ஆ! தெய்வமே! என்னசெய்வேன்? [மூர்ச்சை யடைகின்றாள்.]

ஆகாரம் முதலியவைகளை எடுத்துக்கொண்டு கமலினி வருகின்றாள்.

கம. அடே காவற்காரா! கதவைத்திற, தேவிக்கு ஆகாரம் கொடுக்கவேண்டும்.

மூ. கா. அம்மா, தேவி கீழே விழுந்துகிடக்கிறாங்கோ.

கம. என்ன! என்ன! [விரைவுடன் சிறைச்சாலைக்குட் சென்று] அம்மணி—தேவி! தேவி! ஐஐயோ! இறந்துபோய்விட்டார்களே. அடா, கொலைபாதகா! குரூரகர்மா! இராஜகுமாரியைக் கொன்றாயடா! [வாசந்திகையின் கைநாடியைப்பார்த்து] இல்லை, இல்லை. மூர்ச்சையாய்விட்டாள் பாவம். [வாஸந்திகையின் முகத்தில் நீரைத்தெளிக்க அவள் மெள்ள மூர்ச்சைதெளிகின்றாள்.] அம்மணி! எழுந்திரும், எழுந்திரும்.

வா. யாரங்கே?

கம. அம்மணி, நான்தான் கமலா.

வா. அடி!—சகி, இப்பொழுதாவது கருணை வந்ததோ? நான் சிறையிலிருப்பது உனக்குத் தெரியாதா?

கம. அம்மணி, எனக்குத் தெரியவே தெரியாது. நான் நேற்று அரண்மனைக்கு வரவில்லை. நீலவேணியின் முறை. சற்றுநேரத்திற்கு முன்பாகத்தான் பாவி குரூரகர்மன் என்னை அழைத்து தாம் சிறையிலிருப்பதைத் தெரிவித்துத் தமக்கு ஆகாரம் எடுத்துப்போகும்படி சொன்னான். இதைக் கேட்டதும் என் மனம் பட்டபாடு அந்த ஜகதீசனுக்குத்தான் தெரியும். உடனே ஆகாரத்தை எடுத்துக்கொண்டு வந்தேன்.—இன்னுமொன்று; நகர முழுவதும் தாம் அசௌக்கியமாயிருப்பதாயும் தமக்குப் பதிலாக குரூரகர்மன் இராஜ்ஜியபரிபாலனம்செய்வதாயும் இன்று பிரசுரம் செய்யப்பட்டிருக்கின்றது.

வா. அடா—பாதகா! பாதகா! என்ன எண்ணங்கொண்டிருக்கிறாயடா? கமலா, நான் இப்பொழுது என்ன செய்வேன்? அப்பாதகன், மந்திரிகுமாரன் நீ அன்று

பூந்தோட்டத்தில் என்னை விட்டுச் சென்றபிறகு என்னிடம்வந்து வஞ்சனைவார்த்தைகள் பேசி தன்னை விவாகஞ் செய்துகொள்ளும்படி கேட்டான். நான் மறுத்ததற்கு என்னை இச்சிறையிலிட்டிருக்கின்றான் பாவி! என்மானம்போகின்றது! நான் எப்படி இருப்பேன் ?

கம. அம்மணி, வருந்தாதீர். பெண்ணென்றும் பரிதாபமில்லாமற்போயிற்றோ அவனுக்கு? அம்மணி, இப்பொழுது நாடுமுழுவதும் அவன் வசமிருக்கின்றது. அவனென்னசெய்தாலும் செய்யமுடியும். நீங்கள் மிகவும் களைத்திருக்கின்றீர். இந்தப் பாலில் கொஞ்சம் சாப்பிடுங்கள்.

வ மலா, நான் இறந்துவிடுவது நல்லது. அதற்கு தில்லையா ?

க ணி, இதென்ன இது ? நான் குரூரகர்மனைப் பால கொலைபாதகியல்ல. நான் உம்முடைய அன்னத்தைச் சாப்பிட்டுவிட்டு நீர் படும் வருத்தத்தைப் பார்க்கமாட்டேன். என்னாலானது செய்கின்றேன். நீர் அஞ்சவேண்டாம். இப்பொழுதேபோய் மந்திரி குணலயரை யழைத்துவந்து தம்மைச் சிறையினின்றும் விடுவிக்கிறேன்.

வா. என்னருமைத்தோழி, அப்படியே செய். நீ உடனே சென்று என்னுடைய கதியை குணலயரிடஞ் சொல்லி, என்னைவந்து பார்க்கும்படிசெய். அவர் அப்படி என்னைப்பாராவிடில் நான் பிராணனை விட்டுவிடுவேனென்று சொல். உனக்குக் கொடுக்கும் கஷ்டத்திற்காக என்னை மன்னிப்பாய்.

கம. இது ஒரு கஷ்டமா? அம்மணி, இதோ போய்வரு கிறேன்.

வா. சரிதான் போய்வா? [கமலினிபோகின்றாள்.] இனி கம லா உதவியால்தான் நான் இச்சிறையிலிருந்துந் தப் பித்துக்கொள்ள வேண்டும். [காலடிச்சத்தம் கேட்டு கதவின்பக்கம் பார்த்து] ஐயோ! பாதகன், குரூரகர்மன் மறுபடியும் வருகின்றானே? இன்னும் என்னென்ன செய்ய நினைத்திருக்கின்றானோ தெரியவில்லையே?

குரூரகர்மன் வருகின்றான்.

குரு. வாஸந்திகா, இப்பொழுது சிறையிலிருக்கிறது யார்? [வாஸந்திகை தலைகுனிந்து மௌனமா யிருக்கின்றாள்.] என்ன சும்மா விருக்கின்றாய்? உம்—பெண்புத்தி பின்புத்தி தானே? இந்தக் கஷ்டம் வேண்டாம். என்னை விவாகம் செய்து கொள்ளுவதாக ஒரு வார்த் தை சொல்லிவிடு. நீ இதுவரையிலும் இருந்த ஸ்திதி யைப்பார்க்கிலும் ஆயிரம்மடங்கு அதிகமானஉயர்ந்த பதவியில் உன்னை வைக்கின்றேன். கண்ணே, வா ஸந்திகா, உன்மேலுள்ள காதலே இக்கொடுந்தொ ழிலைச் செய்யும்படி ஏவியது. பிரியே, வேண்டாம், ஒரு வார்த்தை சொல்லிவிடு, இந்தக்ஷணமே சிறையி னின்று உன்னை விட்டு விடுகிறேன். என்ன சொல் லுகின்றாய்?

வா. அடா, பாதகா! மறுபடியும் வந்தாயா? அடா, சண் டாளா! உனக்கு இரக்கமென்பதில்லையா?

குரு. பெண்ணாய்ப்பிறந்த உனக்கே இல்லையே; எனக்கு எப்படி உண்டாகும்?

வா. நான் உன்னை என் சகோதரனைப்போலெண்ணியிருக்க நீ என்னைப் பெண்டாளப் பார்க்கின்றாயே, பரமத் துரோகி! இது உனக்குத் தருமமா? சற்று மனமிளகாது என் நாடு நகர முதலியவைகளையெல்லாம் அபகரித்து என்னையும் சிறையிலிட்டாயே! இப்பாவம் உன்னைச் சும்மா விட்டு விடுமோ? எனது நெஞ்சம் பற்றி எரிகிறதே! பாதகா!

குரு. வாஸந்திகா, வேண்டாம். கடைசியாகச் சொல்லுகின்றேன், மறுக்கவேண்டாம். இப்பொழுதாவது உம்மென்று ஒரு வார்த்தை சொல்லிவிடு. ஏன் வீணில் இக்கஷ்டங்களுக்கெல்லாம் உள்ளாகின்றாய்? வேண்டாம், நான் சொல்வதைக்கேள்.

வா. அடா பாதகா! என்னுயிர் போனாலும் நான் உன்னை விவாகம்செய்துகொள்ளமாட்டேன், போ. இது சத்தியம்!

குரு. அப்படியா? நல்லதிருக்கட்டும்!—அடே காவற்காரா! சிறைச்சாலையின் திறவுகோலை இப்படிகொடு.

[1-வது காவற்காரன் திறவுகோலை கொடுக்கின்றான்.]

கதவுகளை எல்லாம் நன்றாகத் தாளிட்டிருக்கின்றாயா?

1-கா. ஆ, நல்லா பூட்டிரிருக்கேன் மஹாராஜா,

குரு. [காவற்காரனிடமிருந்து திறவுகோலை வாங்கிக்கொண்டு] வாஸந்திகா, நான் இவ்வளவு வேண்டியும் என் வார்த்தையை நீ கேட்கவில்லை யல்லவா? நல்லது இன்றிரவு பார்த்துக்கொள்வோம்.—அடே சேவகர்களே! ஜாக்கிரதையா யிருங்கள்.

2-கா. அப்படியே, மஹாராஜா!

குரு. சரிதான்-[சிறிதுதூரம்சென்று திரும்பிப்பார்த்து] ஓஹோ! என்தந்தை வருகிறார்! இவரேன் இங்கு வருகிறார்? ஆ ஹா! கமலினியும் கூட வருகிறாள். ஒருகால் இவள் சென்று தந்தையை அழைத்து வருகிறாள்போலும்! நான் இவளை இது வரையிலும் என் வசமாக்கிவிட்டேன் என்று நம்பியிருந்தேன், இவள் என்னை வஞ்சிக்க எண்ணி இருக்கின்றாள்போலும்! சரி—பிறகு பார்த்துக் கொள்வோம் இவளை. இவ்விடமிருக்கலாகாது. [போகிறான்.]

குண. [திரைக்குள்] அப்படியா செய்தான் அப்பாதகன்? எங்கே அவன்?

குணலாபரும் கமலினியும் வருகிறார்கள்.

வா. ஆ! மந்திரியாரே! ஐயோ! உமக்கு இப்பொழுதுதான் இரக்கம் வந்ததோ? நான் இவ்விரண்டு தினங்களாய் ஆகார மின்றி தம்முடைய மைந்தன் வஞ்சனையினால் இச்சிறையி லிருக்கின்றேனே. என் தந்தை இறக்கும்பொழுது தாம் என்னை தமது புதல்வியைப்போல் பாவிப்பதாக வாக்களித்தீரே. நான் என்ன வேண்டியும் உமது மைந்தன் மனம் கரையவில்லையே! இன்றிரவு என்னை மானபங்கம் செய்வதாகச் சொல்லிச்சென்றானே பாதகன் இப்பொழுது!

குண. என்ன?

கம. அடா பாதகா!

வா. என் மனம் தயங்குகின்றதே! தாமாவது சற்று கூறலாகாதா? நான் உமது பெண்ணைப்போலன்றோ?

குண. அப்படியா எண்ணி இருக்கிறான் பாதகன்? இதோ உன்னைச் சிறைவிடுவிக்கின்றேன், அழவேண்டாம் தாயே. அம்மா, இக்கோலத்தில் உன்னைக்காண நான் மனந்தாளமாட்டேன், ஐயோ!-எங்கே அந்தக் குலத்

துரோஹி, குரூரகர்மன்?—அடே-சேவகர்களே! கதவைத் திறவுங்கள் உடனே. [தனக்குள்] உலகோர் இதை அறிந்தால் என்மானம் போகுமே! இதுஎன்ன விதி எனக்கு? [வெளிப்படையாக] என்னடா சும்மா நிற்கின்றீர்கள்? கதவைத்திறவுங்கள் உடனே.

1-கா. பிரபு—எங்கோ கிட்ட சாவியில்லெ.

குண. அக்கறையில்லை, உடைத்து எறியுங்கள் பூட்டை.

2-கா. பெரிய பூட்டுங்கோ!

குண. திறவுகோல் யாரிடமிருக்கின்றது?

1-கா. எஜமாங்கோ பிள்ளை குரூரகர்ம மஹாராஜாவிடத்திலிருக்குதுங்கோ சாவி. இங்கே வந்து இப்போதான் சாவியை வாங்கிப்போனாருங்கோ.

குண. எங்கேபோனான், எப்படிப்போனான்?

1-கா. இப்படித்தான். [குரூரகர்மன் போனவழியைக் காட்டுகின்றான்.]

குண. அப்படியா? அம்மா, வாஸந்திகா, வருந்தாதே. சற்று மனதைத் தேற்றிக்கொள், குழந்தாய், உன்னைச் சிறையினின்றும் விடுவித்துவிட்டு மறுவேலைபார்க்கின்றேன். சிறிதும் கவலைப்படாதே. உன்னை இக்கோலங் கண்ட பாதகர்கள் யாராயிருந்தபோதிலும் கழுவேற்றி விடுகின்றேன். எனக்கு விடையளிப்பாயாகில் இதோ நானே போய்த் திறவுகோலை வாங்கிவந்து உன்னை விடுவிக்கின்றேன்.

வா. ஐயோ! குணலயரே! தாமும் சொல்லுகின்றீரா?

குண. குழந்தாய், சற்று தைரியமாயிரு. அப்பாதகனை அரைக்ஷணத்தில் அடக்குகின்றேன்.—நான் வருமளவும், கமலா, இங்கிரு.

கம. அப்படியே இருக்கின்றேன்.

குண. யோசிக்க வேண்டாம். உன்னை விடுவிக்காது நான் உயிர் வாழேன் என்று உறுதியாய் நம்பு—இதோ வந்துவிட்டேன்.

வா. ஆனால் சீக்கிரம் வாரும். [குணலயன் போகிறான்.] கமலா, மந்திரி சீக்கிரம் வந்து என்னை விடுவித்து விடுவரா ?

கம. அம்மா, சீக்கிரம் வருவாரென்று நம்புகிறேன். ஆனால் குரூரகர்மன் இவர் கேட்டவுடனே திறவுகோலைக்கொடுத்து விடுவானா ? இத்தனை ஏற்பாடுகள் செய்தவன் அவ்வளவு சுலபமாய்க் கொடுத்துவிடப்போகிறானா ? [சற்று ஆலோசித்து] அம்மணி, எனக்கொரு யோசனை தோன்றுகின்றது !

வா. என்ன யோசனை ?

கம. இதற்கின்னமொரு திறவுகோலுண்டே? [இரகசியமாக சற்றுபேசி] அம்மணி, நான்போய் குணலயரைச் சீக்கிரமாக அழைத்து வருகிறேன். [போகிறாள்.]

1-கா. அண்ணே, என்ன அநியாயம் பாத்தையாடா ! மகாராணியம்மாளையே இப்படிச் செய்திருக்காங்களே பாவிங்க !

2-கா. மந்திரியோ கெழவனுப்போனு — ராணியம்மாளோ பொம்பளே ! கேக்கணுமா ? மொட்டப்பயங்கோ—தலைவிரிச்சிக்கினு ஆடமாட்டங்களா ! எனக்குங்கூட மந்திரி கேட்டாங்களே அந்தப்பூட்டே ஒடச்சுடுணும் இண்ணிருந்தது—ஆனா தைர்யமில்லாமெ போச்சு—அதுபோகட்டும், செறச்சாலேகதவு சாவியோ நம்பகிட்டே இல்லே. இந்த மந்திரி கெழவன் சாவியெக்

கொண்டாந்தூரேண்ணு போயிருக்கான். மொதல்லே ஆசாமி ஆப்புடுவாணு இந்தக்கிழவனுக்கு?-அண்ணே, நான் சொல்ரத்தைக்கேளு-நேத்தெல்லாம் தூக்கமேயி ல்லே. இண்ணைக்குங்கூட அப்படித்தான் வந்துசேருமோ என்னமோ—எனக்குத் தூக்கம்வருது, நான் கொஞ்ச நேரம் படுத்துக்கிறேன். [படுத்துக்கொள்ளுகிறான்.]

1-கா. அப்படித்தான்செய்யேன், காலெல்லாம்கூட நோவுது. நான் கொஞ்சம் குந்திக்கி னிருக்கிறேன்.

[உட்கார்ந்து தூங்கி விடுகின்றான்.]

[கமலினி திறவுகோலும் உடுப்பும் கொண்டு வந்து சிறைச்சாலைக் கதவைத் திறந்து உள்ளே போகின்றாள்.]

கம. அம்மணி, இக்காவற்காரர்கள் நித்திரைபோய்விட்டார் கள். நீங்கள் உடையைச் சீக்கிரம் தரித்துக்கொள் ளுங்கள். [வாஸந்திகை உடையைத் தரித்துக்கொள்ளு கிறாள்.] நேராகப் போனால் இவ்வீதிக்கோடியில் ஒரு ஆலமரமிருக்கின்றது. அவ்விடத்தில் இரண்டுவழிகள் பிரிகின்றன. கிழக்குவழி காட்டிற்குச்செல்லுகின்றது. மேற்கு செல்வது நாட்டிற்குப் போகின்றது. அம் மேற்குவழியே போனால் கொஞ்சதூரத்திற் கப் பால் ஓர் பாறையின்மீது கிணறும் அதற்கடுத்தாற் போல் ஓர் சாவடியும் இருக்கின்றன. அவ்விடம்போய் தங்கி இரும். நான் அதற்குள் சென்று மந்திரியாரிட மிருந்து தங்களுக்கு வேண்டியவற்றை வாங்கிக் கொண்டு வருகிறேன்.

வா. என் உயிர்த்தோழி, நல்ல உபாயம்செய்தாய். எப்படி யாவது இச்சிறையை விட்டுத் தப்பினால் போதும். நான் எப்படிப் போகவேண்டும்?

கம. இவ்விடத்தைவிட்டு நேராகப் போம்.

வா. சரி.

கம. இவ்வீதியின் கோடியில் ஓர் ஆலமர மிருக்கின்றது.

வா. உம்.

கம. அங்கே இரண்டு வழிகள் பிரிகின்றன.

வா. உம்.

கம. கிழக்கே போவது காட்டிற்குச்செல்லும் வழி.

வா. கிழக்கே செல்வதா?

கம. ஆம். மேற்கே செல்வது நாட்டிற்குப் போகின்றது.

வா. உம்—

கம. தெரிந்ததா? அம்மேற்கு வழியேசென்றால் கொஞ்சந் தூரத்தில் ஓர் சாவடியும் கிணறும் இருக்கின்றன. அங்கே இரும். தெரிந்ததா? நீர் அவ்விடம் போவதற்குள் நான் உம்மை வந்து சேருகிறேன்.—

வா. கிணற்றண்டை இருக்க வேண்டுமோ?

கம. பயப்படாதீர். கிணற்றின் சமீபமிருக்கும் சாவடியில் இரும். ஒருவரும் இருக்கமாட்டார்கள். அப்படி யாராவது கேட்டால் நீர் ஒரு பரதேசி என்று சொல்லும்.

வா. அப்படியே.—

[கமலினி வெளியேவந்து காவற்காரர்கள் நித்திரை செய்வதுபார்த்து ஜாடை செய்கிறாள். உடனே வாஸந்திகை சிறைச்சாலையை விட்டு வெளியே வந்துவிடுகிறாள்.]

கம. அம்மணி, தைர்யமாய்ப்போம். ஜாக்கிரதை. இல்லாவிடில் உயிர்க்கு மோசம் வந்துவிடும். வழி தப்பிப் போகப்போகிறீர்.

வா. இல்லை, நீ சொன்னவழியே போகிறேன்.—கமலா, சீக்கிரம் வந்து விடு. [போகிறாள்.]

கம. அம்மணீ, ஜாக்கிரதை. நானும் சிறைச்சாலையின் கதவுகளைத் தாளிடாது சும்மா சாத்திப் போய்விடு கின்றேன்.

[கமலினி சிறைச்சாலையின் கதவுகளைத்தாளிடாது சும்மா சாத்திக் கொண்டு போய்விடுகிறாள்.]

மற்றொருபக்கம் க்ரூரகர்மன் வருகிறான்.

குரு. வாஸந்திகா! வந்துவிட்டேன். இப்பொழுது என்ன செய்யப் போகிறாய்?—இதென்ன காவற்காரர்கள் தூங்குகின்றார்கள்! ஓஹோ! சிறைச்சாலையின் கதவுகள் திறக்கப்பட்டிருக்கின்றன. [சிறைச்சாலைக்குட்சென்று] ஆஹா! மோசம்செய்தாளே வாஸந்திகை!——என்ன செய்வது!-வாஸந்திகா உன்னை விட்டுவிட்டேனென்று நினைக்காதே. [சிறைச்சாலைக்கு வெளியே வந்து] இப் பாதகர்கள் தூங்கிவிட்டார்கள். [காவற்காரர்களை குரூரகர்மன் உதைக்க அவர்கள் உடனே எழுந்து பயந்து மரியாதை வந்தனம்செய்து நிற்கின்றார்கள். குரூரகர்மன் உடனே தன் தாரையை ஊத இரண்டு சேனைவீரர்கள் வருகின்றார்கள்.] யாராவது உடனே சென்று ரணகேஸரியை அழைத்துவாருங்கள்.

1-வீ. சாமி, சித்தம்.

2-வீ. இதோ எஜமாங்கோ வாராங்கோ.

ரணகேசரி வருகிறான்.

ரண. நண்பரே, என்ன விசேஷம்?

குரு. எல்லாம் கெட்டுவிட்டது. வாஸந்திகை தப்பித்துக் கொண்டு போய்விட்டாள். உடனே அவளைத் தேடிப்

பிடிக்கத் தூதர்களை அனுப்பும். மற்ற விஷயங்களைப் பற்றி காலை பேசிக்கொள்வோம். காலதாமதங் கூடாது. வாரும் போவோம். குழப்பமாய்விடும்—

[காவற்காரர்கள் தவிர மற்ற யாவரும் போகிறார்கள்.]

---

# இரண்டாவது அங்கம்.

## மூன்றாங் களம்



இடம்:— ஹஸ்திநபுரத்திலொரு இராஜவீதி. காலம்:—காலை.

வஸுதேவனும், ஸ்ரீகாந்தனும் வருகிறார்கள்.

வஸு— இதென்ன அநியாயம்? இதென்னகொடுமை? இந்த சமாசாரத்தைக் கேட்டு நாம் சும்மா விருக்கலாமா? ஸ்திரீ ஹத்தியாயிற்றே! இனி எவ்வாறு இந்நாட்டில் வாழ்வது?

ஸ்ரீ. நாட்டைக் கவர்ந்து கொள்ளவேண்டு மென்பது அவர் களெண்ணம். ஆதலால் அதற்குத் தடையாயுள்ள வைகளை ஒழித்து விடுகிறார்கள்.—

சில நகரவாசிகள் வருகிறார்கள்.

1-நக. கொடுமையைக் கேட்டீர்களா?

2-நக. ஐயா! இந்த ஊரில் நியாயமில்லையா?

3-நக. கொடுங்கோல் செலுத்து கின்றானே!

2-நக. மஹாராணியையுங் கொன்று விட்டானுமே பாதகன்!

1-நக. அவன் உயிரை வாங்கவேண்டாமா?

2-நக. அன்று நடந்த விருந்தின் பின்புதானே மகாராஜா வுக்கு நோயுண்டானது?—விஷமூட்டின தென்று தானே சொல்லுகிறார்கள்?

3-நக. ஆம், ஆம். இப்படிப்பட்ட அநியாயங்கள் நடந்தால் மழை ஏன் பெய்யும்? ஏன் பூகம்பம் உண்டாகாது? ஏன் க்ஷாமம் வராது?

1-நக. அவனைச் சும்மா விட்டு விடலாமா? பழிக்குப் பழி வாங்க வேண்டாமா? என்ன சொல்லுகின்றீர்?

ஜெயபாலன் வருகிறான்.

ஜெய. ஐயா! ஐயா! என்னைக் காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்! என்னைப் பிடிக்க வருகின்றார்களே! நான் ஒரு பாவமு மறியேனே! [ஸ்ரீகாந்தரின் காலில் விழுகின்றான்.]

ஸ்ரீ. என்ன? என்ன? ஜெயபாலா! ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம். நானிருக்கிறேன். எழுந்திரு.

நான்கு சேனைவீரர்கள் வருகிறார்கள்.

1-வீ. நீங்க விடுங்கோ. அவனெ பிடிச்சிவரும்படி கட்டளெ யாயிருக்கு.

1-நக. யார் கட்டளை?

2-வீ. நீயார் கேட்க?

ஸ்ரீ. சும்மா இரும்.—என்ன காரணத்திற்காக இவனைப் பிடிக்க வேண்டும்?

1-வீ. ராஜத்ரோகஞ் செய்தான்.

ஜெய. ஐ ஐயோ! நானொன்றுஞ் செய்யவில்லை ஐயா.

1-வீ. ஏன் பொய் சொல்றே?

2-வீ. இவன் மவள் கமலா நம்பமகாராசா குரூரகர்மா இருக்குறுங்களே—

2-நக. யாரடா மஹாராஜா?

ஸ்ரீ. அவசரப்படாதீர்கள். தீர விசாரிப்போம்.

1-வீ. அவோ மோசஞ் செய்தா—அவளைத் தேடித் தேடிப் பார்த்தோம். ஆசாமி ஆப்பிடலே. இவந்தான் அவளெ எங்கேயோ ஒளிச்சி வச்சிக்கிறுன்.

ஜெய. ஐயா! ஐயா! கேளுங்கள், அநியாயத்தைக் கேளுங்கள்.

2-வீ. இவனைக் காவல்லெ வைக்கக் கட்டளெ இக்குது.

ஜெய. ஐயா! நான் என் மகளைக்கண்டு இரண்டு மூன்று தினங்களாயின. அரண்மனைக்குச் சென்றவள் மறுபடியுந் திரும்பி வரவில்லை. நான் ஒரு பாவமு மறியேன்.

1-நக. என்னகொடுமை! என்னகொடுமை! இவனை ஒழித்து விடுவதற்கு அந்தப் பாதகன் குரூரகர்மன் உண்டாக்கிய குழப்பம் இது.

1-வீ. ஏ! ராஜவெ திட்டாதே. உன்னெ காவல்லெ வைச்சுடுவோம்.

ஸ்ரீ. பொறுங்கள். பொறுங்கள்.

2 வீ. நம்ப வேலெயெச் செய்யணும். நாங்க நம்ப ராஜாபடர்கள். ராஜ நிந்தனெ பொறுக்காது.

நக. சண்டாளர்! சண்டாளர்! சுவாமி! என்ன கொடுமை என்ன கொடுமை!

ஸ்ரீ. ஏன் வீணாய்க்கூச்சலிடுகின்றீர்கள்?—அதிருக்கட்டும். விசாரணையில்லாது இவனைச் சிறையிலிடுவானேன்?

1-வீ. அப்படித்தான் எங்களுக்குக் கட்டளெ. அதுக்கெல்லாம் நாங்க உத்தரவாதிங்கல்ல. அவனெ உட்டேணும்.

ஸ்ரீ. உங்களுக்கு வேண்டியபோது ஜெயபாலன் இராஜமண்டபத்து நடக்கும் விசாரணையில் வரச்செய்கின்றேன். இதற்கு நான் உத்தரவாதம்.

1-வீ. அந்தத் தொல்லெ நம்பளுக்குச் சரிப்படாது. கட்டளெப் பிரகாரம் நம்ப நடக்கணும்.

ஸ்ரீ. என்ன! கேட்க மாட்டீர்களா? எங்கே உங்கள் கட்டளை? காட்டுங்கள் பார்ப்போம்.

1-வீ. அடே, கட்டளெயெ கேக்கராங்கோ, காட்டு.

2-வீ. கட்டளெயெ நாங் கொண்டார்லே, கச்சேரியிலேயே வைச்சுட்டேன்.

ஸ்ரீ. அப்படியானால் நீங்கள் இவனைப் பிடிப்பது நியாயமல்ல.

1-வீ. அது எங்களுக்குத்தெரியாது. எங்களுக்கு இவனெப் பிடிச்சி வரும்படி கட்டளை.

ஸ்ரீ. என்ன! எழுத்து மூலமாய் கட்டளை இல்லாது ஒருவனை அநியாயமாய்ச் சிறையிலிட உங்களுக்கு அவ்வளவு தைரியமா? இது ஹஸ்தினாபுரமல்லவா? அவனைத் தீண்டாதீர்கள்.

1-வீ. நீங்கோ யார் தடுக்க? நாங்கள் எங்கொ கட்டளெப்படி செய்வோம்.

[சேனை வீரனொருவன் ஜெயபாலனைக் கையைப்பற்றி இழுக்க ஸ்ரீகாந்தன் கோபமுண்டு அவனை உதைத்துத்தள்ளுகின்றான். அவர்கள் உடனே தங்கள் தாரைகளை ஊதுகிறார்கள்.]

உடனே ரணகேசரி வருகிறான்.

ரண. என்ன கலகம்?

1-வீ சாமி, கட்டளெப்படி இவனெப் பிடிக்கவந்தோம். இவங்க கலகம் பண்ராங்க!

ரண. ஸ்ரீகாந்தரே, இதென்ன வேலே? நியாத்திற்கு விரோதமாக நடக்கலாமா? மஹாராஜா ஆக்கினைப்படியல்லவோ நடக்க வேண்டும்.

நக. ராஜா யார்? மகாகொலைபாதன், குருரகர்மனு?

ரண. இராஜ நிந்தனை செய்பவர்களை உடனே காவலில் வைத்துவிடுவோம். ஜாக்கிரதையாய்ப் பேசுங்கள்?

ஸ்ரீ. சும்மா இருங்கள் நண்பர்களே?—என்ன ரணகேசரி, இராஜ கட்டளையைக் காட்டாது ஒருவனைப் பிடிக்க என்ன அதிகாரமிருக்கின்றது உமது சேவகர்களுக்கு?

1-வீ. கட்டளெயெ நாங்கள் கொண்டார்லெ.

ரண. சரிதான், கட்டளையைக்கொண்டுவர மறந்துவிட்டார்கள். கட்டளையின்றி ஒருவனை அநியாயமாய்ப் பிடிப்பார்களா? நீர் விட்டு விடும் அவனை.

ஸ்ரீ. நான் உத்தரவாதம் அவனுக்கு, விடும் அவனை.

ரண. அப்படி விட முடியாது.

ஸ்ரீ. நீதிக்கு விரோதமாய் நடக்க மஹாராஜாவுக்குத்தான் என்ன அதிகார மிருக்கின்றது?

ரண. ஏன் வீணு வாக்கு வாதஞ் செய்கின்றீர்? இராஜாக்கினையை நாங்கள் நிறை வேற்ற இருக்கின்றோம். அவனை விட்டுவிடும். இல்லாவிடில் நீரும் அவனுடனே சிறைச்சாலைக்குச் செல்லும்.

ஸ்ரீ. என்ன சொன்னீர்? என்ன சொன்னீர்? உம்மை நீர் மறந்து பேசுகின்றீரோ என்ன?

ரண. நான் என்னை மறந்துபேசவில்லை. இராஜகட்டளை இப்படி என்று சொன்னேன்.

ஸ்ரீ. ஓய் ரணகேஸரி! உம்முடைய குணமும் புத்தியும் இப்படித் திரும்பிவிடுமென்று நான் நினைக்கவில்லை. சகவாசதோஷம் போலும். என்னை ஒரு பொருளாகக் கருதாது உமக்குத் தோன்றின பிரகாரம் மதிப்பின்றிப் பேசவந்து விட்டீர்?

ரண. நான்தான் உண்மையை வெளியிட்டேனே. அதை யறிந்துகொள்ள சக்தியற்றவரா யிருக்கின்றீர் நீர். என்னை நோவானேன்? வீணாக அவசரப்படவேண்டாம்.

ஸ்ரீ. என்ன தாறுமாறுப் பேசுகின்றீர்? அவசரப்படுவதாவது? உம்முடைய தொழிலுக்குள்ள புத்தியைக் காட்டிவிட்டீரே.

ரண. என்ன! என்ன சொன்னீர்? அப்படியா! அதிகமாய்ப் பேசாதேயும்? என்ன! நாங்கள் அதிகார புருஷர்களென்பதை மறந்து கண்டதைப் பேசுகின்றீர் நீர். குடிகளுடைய ஒற்றுமையை வீணாய்க்கலக்கின்ற உமக்குச் சிறைச்சாலையே தக்கது. [சேனைவீரர்களை நோக்கி] இவரையும் பிடித்துச் சிறையிலிடுங்கள்.

[சேனைவீரர்கள் எல்லோரையும் இழுத்துச் செல்லுகின்றார்கள்.]

நக. அடே! சண்டாளப்பாவிகளா, நாசமாய்ப் போவீர்கள்!

ஸ்ரீ. அடேபாதகா, ரணகேஸரி—நீயும் இவ்வளவு கொடியவனா? பச்சாத்தாபப்பட்டு நிரபராதிகளான குடிகளைக் காப்பாற்ற எண்ணங்கொண்டு நீங்கள் செய்த அநியாயத்தை வெளியிட்டால் சிறிதேனும் யோசியாது என்னைச் சிறையிலிடக் கட்டளையிட்டா யல்லவா? பாதகா! நீயும் என்னைப்போல் சிறையிலிடப்பட்டு அனுதையாக அலையமாட்டாயா? குடிகள் மனம் வருந்தி அழுவது வீணாகாது பார்! நீ இக்கதிக்குச் சீக்கிரத்தில் வராமல் போகமாட்டாய்.

[ரணகேஸரி தவிர மற்றெல்லோரும் போகிறார்கள்.]

குருகர்மன் வருகின்றான்.

குரு. இது என்ன கலகம் ரணகேசரி?

ரண. ஸ்ரீகாந்தன் இராஜநிந்தனை செய்ததுமன்றி கலகமுஞ் செய்ய ஆரம்பித்தான். ஆகையால் அவனையும் மற்றவர்களையும் சிறையிலிடக் கட்டளை இட்டிருக்கின்றேன். இதோ அழைத்துக்கொண்டு போகிறார்கள்.

குரு. அப்படியா? ஆம், ஸ்ரீகாந்தன்மேல் எனக்கு வெகு நாளாகச் சந்தேகமுண்டு. இவனிருக்குமளவும் நமக்குத் தொந்திரவுதான். அவனை உடனே சிரச்சேதஞ் செய்வதே நலமென்று தோன்றுகிறது எனக்கு.

ரண. ஐயோபாவம்! அவ்வளவு கடுந்தண்டனைவேண்டாம். சிறையிலிட்டால் அதுவேபோதும்.

குரு. ரணகேசரி, உமக்குத் தெரியாது அவனுடையகுணம். நான் நன்றாய் அறிவேன்.—யாரங்கே? [ஓர் காவற்காரன்வருகிறான். குருகர்மன் ஓர் கடிதம்எழுதி அவனிடம் கொடுக்கிறான்.] இதோ இந்தக் கட்டளையை நரபாலனிடங் கொடுத்து உடனே நிறைவேற்றி விடும்படி சொல்; சற்றும் தாமதிக்கக் கூடாதென்று கண்டிப்பாய்ச் சொல், போ.

ரண. அரசே, வேண்டாம், வேண்டாம், பாவம்.

குரு. பாவமாவது! புண்ணியமாவது! உமக்குத்தெரியாது.— உடனே கொண்டுபோ. [காவற்காரன் போகிறான்.] நான் வருகின்றேன். [போகிறான்.]

ரண. ஐயோ! இதென்ன அநியாயம்? மஹாராஜா! நான் சொல்வதைக் கேளும்.—[குருகர்மனைப் பின்தொடர்ந்து போகிறான்.]

---

# இரண்டாவது அங்கம்.

## நான்காம் களம்.



இடம்:—ஹஸ்தினாபுரத்திற் கடுத்த வனம். காலம்:—மாலை.

வாஸந்திகை சன்யாசி வேடம் பூண்டு கையில் ஓர் மூட்டையுடன் வருகிறாள்.

வா ஐயோ! கமலாவைக்காணோமே யின்னும்! என்னசெய்வேன்?—பாவி நான் வழிதவறிவிட்டேன்! இந்நேரம் அலைந்தும் ஒருவழியும்தெரியவில்லையே! எந்தப்பக்கம் திரும்பினாலும் குரூர மிருகங்களின் குரலைத்தவிர வேறொரு சப்தமும் என்காதுக்குக் கேட்கவில்லையே! அஸ்தமிக்க இன்னும் ஆறுநாழிகை கூட இல்லையே! நான்எவ்வாறு இக்காட்டைவிட்டுச்செல்வது? அலைந்து அலைந்து என் கால்கள் தேய்ந்துவிட்டனவே! தாகமோ அதிகரிக்கின்றது. என்னசெய்வேன்? இந்த அன்னத்தைச் சாப்பிடலாமென்றாலோ ஜலத்தையுங்காணேனே!—ஆ! கௌரீ! உன்னை இத்தனைநாட்களாயன்போடு பூசித்ததற்குப் பலன் இதுதானோ?—அடா பாவி! குரூரகர்மா, என்னகாரியம் செய்துவிட்டாயடா—ஆ? இது பாதகர்களுக்குத்தான் காலம்.—இங்கு சிறிது குளிர்ந்தகாற்று வீசுகின்றது! மழை வருகின்றதோ, இல்லையோ? [ஆகாயத்தைப்பார்த்து] காணோமே! சமீபத்தில் ஜலம் இருக்கின்றதுபோலும்.—ஆ! அதோ அம்மரத்தின் பக்கத்தில் தடாகமிருக்கின்றது போலும். [போகின்றாள்.] ஆ ஹா! அம்மட்டும் கௌரி என்னிடத்தில் கருணையுள்ளவ

ளாகவே இருக்கின்றாள். இது மிகவும் பாரமாக விருக்கின்றது. இதைக்கழற்றி இப்படி வைப்போம்.

[தன் தலையிற் கட்டிய ஆடையைக் கழற்றி குளத்தின் கரையோரம் வைத்து குளத்தில் இறங்குகிறான்.]

பனமரத்தான் சாதமூட்டையுடன் வருகிறான்.

பன. என்னடா தொந்தரவா இக்குது!- எளவு, சனியன்! ராசாத்தியா ஓடிப் பூட்டாளாம்—அவளெ நான் தேடிப் பிடிச்சிக்கிண்ணு வரண்ணுமாம். இந்தச்சள்ளெ எனக்கேன்? காத்தாலெ யெல்லாம் திரிஞ்சி திரிஞ்சி காலெல்லாம் அலுத்துப்போச்சு[யோசிக்கிறான்] ஆனா ராசாத்தியெ புடிச்சிக்கினு வந்தாக்கா ரொம்பரொம்ப பணந்தாராங்களாம். அப்படிக் கொண்ராப் போனாக்கா கொண்ணூடு ராங்களாம். இந்தத் தொந்தரவெல்லாம் எனக்கேன்ரேன்? இந்தமடம் இல்லாட்டி சந்தமடம். நம்பவேலே இக்கவேஇக்குது —என்னப்பன் கருப்பண்ணசாமிதாங் காப்பாத்தணும் என்னெ. பொங்கப்போட்டுவேன் எஞ்சாமிக்கு. உம்—நான் வந்தேனா, சவுனங்கூடஆச்சி. அந்த கருங்குருமான் இக்குதல்ல அது இப்படிப் போச்சா ஒடனே ஏந்திச்சி பொக்குபொக்குனு வந்தேனு. வர்ரவயிலெ நடுப்ரவொத்தப்பாப்பான் வந்தான் யென் எதுக்காலெ. குத்னேம் பாரவனெ, அப்படியே மூணுலோட்டம் போட்டு கீயே வியுந்தான். அப்பொ-அவங்கொண்டாந்தானே சோத்து மூட்டெ அதெ எடுத்து மரச்சிவச்சுக்கினு ஓடியாந்துட்டேன்.-அடா எஞ்சாமி! ரொம்பநேரமாயிப்போச்சு எளவு. என் ஈரக்கொலெ எரியுது. தண்ணிகூடஇல்லெகுடிக்க. எங்காலெல்லாம்நோவுது,

நடக்கவே முடியலியே. சாமி! என்னே நீங்கத்தாம் காப்பாத்தனும் இப்ப. [திரும்பிப்பார்த்து] அடடே, அங்கே என்னுடா தண்ணிகெடக்குது. யாரிக்காங்க? அதோ தண்ணி சத்தம் சளசளன்னு கேக்குதே. என் சாமி இங்கே எனக்கு தண்ணி குடிக்கக் காட்டுனே. உங்களுக்கு ரொம்ப ரொம்ப புண்ணியங். [குளத் தண்டை போய்க்கொண்டு] அங்கே யாரிக்காங்க? போய்த்தாங் பாக்கலாமே. [குளத்தில் எட்டிப் பார்த்து வாஸந்திகையைக்கண்டு ஆச்சரியப்பட்டு] அடே எஞ் சாமி! ஆரோ பொம்பளெ, சாப்டுக்கிணிக்கு. உம்— மொள்ள மேலேதான் வரட்டுமே பாக்ரேன் என்னத் தான் செய்ராண்ணு. இந்த மரத்துக்குப் பின்னுலே ஒளிஞ்சிக்கிணும்.

[பனமரத்தான் ஓர் மரத்திற்குப் பின் ஒளிந்துகொள்ளுகிறுன். வாஸந்திகை குளத்திலிருந்து வெளியே வருகிறுள்.]

வா. அம்மணி! அம்மா! [கழற்றிவைத்த ஆடையைத் தலையி லணிந்துகொண்டு] என் கைகால்கள் என்ன சோர்ந் திருக்கின்றன. இப்பொழுதுதான் உயிர் வந்தாற்போ லிருக்கிறது! ஆ, கருணாநிதியே! பர்வதராஜபுத்ரி! நின்னருளால் உயிர்பெற்றேன்.—இங்கு சற்றிருந்து இளைப்பாறி பிறகுஇதோபோகும் ஒற்றையடிப்பாதை யாகப் போவோம்.—கௌரீ! நீயே துணை நின்று என்னை ஓர் நாட்டிற்கொண்டுபோய்ச் சேர்க்கவேண் டும்.—அம்மா, சற்று படுத்து இப்படி இருப்போம்.

[வாஸந்திகை மரத்தின்கீழ்படுத்து உறங்கி விடுகிறுள். பனமரத்தான் மெல்லவந்து வாஸந்திகையின் அழகைப்பார்த்து ஆ னந்தப் படுகிறுன்.]

பன. அடே எஞ்சாமி! என்னசொகுசா இக்ராடா! எனக்கும் இத்தனெ வயசாச்சி, நான் இதுவர்லே இவளெப் போலெ பொம்பளெயெ பாத்ததே இல்லேண்ணு. [பாடுகிறான்.] அடா! இந்தப் பனமரத்தான் அண்ணுவ்வளவு லேசா? தாய்மவன் பாட்டெ கேட்டாக்கா சொக்கணுமே. எனக்கு ரொம்பப்பாட்டுங்க தெரியும்—நண்டு பாட்டு, எலிபாட்டு, தெம்மாங், வீரகாத்தான் பாட்டு எல்லாம். அடா, எஞ்சாமி! அந்த எலிபாட்டு ரொம்ப சொகுசு [சற்று பாடி பிறகு யோசித்து] இக்கும், இக்கும். அத்தான். உம்—உம், பொம்பளெயில்லெ. தேவதெ, தேவதெ! இல்லாட்டி பெசாசா? [நடுங்கி] ஆங், ஆங். ஐயையோ! முரிச்சுடுமே! அடியம்மா! என் தாயே! எங்கொல தேவதெ! என்னெ காப்பாத்தணுங் தாயே, என்னெக் காப்பாத்தணும்.

[தன் கன்னத்தைக் கரத்தாலடித்துக் கொண்டு தூரத்திலிருந்து நமஸ்கரிக்கின்றான்.]

வா. [எழுந்துபார்த்து முதலில்பயந்து உடனேதைரியங்கொண்டு] நீ யார்? எங்கே வந்தாய்? சொல்.

பன. [பயந்து] எந் தாயே! என்னெக் காப்பாத்தணும்.

வா. நீ யார்? உன் சமாசார மென்ன?

பன. எந் தாயே! நாந் ஒரு நாட்டுப்பொரத்தான். எங்க ஊரு ராசாத்தி இக்குறுளே அவ ஒடிப்பூட்டாளாங். அந்த பொம்பளெயெ கண்டு பிடிச்சுக்கிணு வாண்ணு மந்திரிப் பையேன் அனுப்பிச்சாங்மா என்னெ?

வா. [பயந்து] உம்—பிறகு.

பன. நாங் எங்கெங்கேயோ எல்லாந் திரிஞ்சி திரிஞ்சி கடசிலே இங்கே வந்தேனு? ரொம்ப தாவமாப்போச்சுங்க, தண்ணி குடிக்க இந்த கொளத்தெ எட்டிப்பாத்தேனு. அங்கெ அம்மா சாப்பிட்டுக்கிணிருந்திங்க. ஆரோண்ணு தூரமாப்போயி நிண்ணுக்கினே, இப்பொ தான் இங்கெ வந்தேங்க. தாயே! என்னெக் காப்பாத்தனும்

வா. [பயம்நீங்கி] நீபோய் முதலில் உன் தாகத்தைத் தீர்த்துக் கொண்டுவா. போ.

பன. [வாயை மூடிக்கொண்டு] அப்படியெ என் தாயே! [போகின்றான்.]

வா. ஆஹா! பாதகா! குரூரகர்மா! உன் குரூரகர்மம் இன்னும் ஒழியவில்லையா? நானென் நகரைவிட்டு வந்தும் என்னைத் தேடிப்பிடிக்கும்படி ஆட்களை அனுப்பியிருக்கின்றாயா?—இவன் என்னைக்கண்டு பயந்துவிட்டான். இது ஈசன்செயல்! ஆயினும் என்னைப் பெண்பாலென்றறிந்து கொண்டான்.— [யோசித்து] இதுதான் நல்ல யோசனை. நான் தைரியத்தைக் கைவிடாது இவனைப் பயமுறுத்தி இவன்தேடிவந்த இராஜகுமாரத்தியைக் காட்டுவதாகச் சொல்லி இவனைத் துணையாகவைத்துக்கொண்டு ஒரு நாடுபோய்ச் சேரவேண்டும்.

[பனமரத்தான் கரையேறி வருகிறான்]

வா. அடே, உன் தாகத்தைத் தீர்த்துக்கொண்டாயா?

பன. என்னெப்பெத்த தாயே! ஆச்சிங்க.

வா. நல்லது நான் யார் தெரியுமா உனக்கு? [பனமரத்தான் பயத்துடன் விழித்துப்பார்க்க] என்ன விழிக்கின்றாய்?

பன. தெ-ரி-ய-ல்லிலங்க-தாயே!

வா. நான் இவ்வனத்திற்கதிபதி. என்னை இவ்வனதேவதை யென்று சொல்லுவார்கள்.

பன. தாயே! கும்பிர்றேன். என்னெக் காப்பாத்தணும்.

[வாஸந்திகையைக் கும்பிடுகிறான்.]

வா. இப்பொழுதுதான் சற்று நேரத்திற்கு முன்பாக உன்னைப்போன்ற ஓர் மனிதனை முறித்துவிட்டு இக்குளத்தில் தாகத்தைத் தீர்த்துச் சற்று எனது சிரமத்தை நீக்கிக்கொண்டேன். என்னுடைய சொரூபத்தை யாராவது கண்டால் பயப்படுவார்களென்றெண்ணி இவ்வடிவங்கொண்டிருக்கின்றேன். இம்மரத்து நிழலில் படுத்திருந்த என் தூக்கத்தை நீ வந்து கெடுத்துவிட்டாய்.

பன. [பயத்துடன்] எங்கொலதேவதெயே! எங்னெக்காப்பாத்தணும், காப்பாத்தணும். நாஞ்செய்த தப்பெ மன்னிக்கணம்மா. [நமஸ்கரிக்கின்றான்.]

வா. அடே! நான் சொல்லுகிறபடி செய்தால் உன்னை மன்னிப்பேன், இல்லாவிட்டால் உன்னை இங்கேயே—

பன. ஆ!—அய்யோ. அப்படியே ஆவுட்டுஞ் செய்ரேன், செய்ரேங்க தாயே.

வா. சரிதான், உம்—இக்காட்டிற்கப்பால் ஓர் ஊரிருக்கின்றது.

பன. உம்—உம். இக்குதுாங்க. உம்—வெறட்டுதேசங்.

வா. என்ன தேசம்?

பன. வெறட்டுதேசங்—தா-தாயே!

வா. விராடதேசம்!

பன. ஆ, ஆமாங்க, ஆமாங்க தாயே.

வா. நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். அவ்விராட தேசத்திற்குப்போக எண்ணியிருக்கின்றேன். என்னுடன் வரவேண்டும். தெரியுமா? அப்படி வந்தால் உன் ராஜாத்தியையுங் காட்டுகின்றேன்.

பன. ஆவுட்டுங் தாயே! அப்படியேங். என்னெமட்டுங் கொண்ணுடாதிங்க தாயே.

வா. உன்னை நான் ஒன்றுஞ் செய்யவில்லை. பயப்படாதே. வா. இது சத்தியம். தைரியமாய்ப்போ. வழி தெரியுமல்லவா உனக்கு?

பன. தெரியுங்கதாயே. இதோ போவுதே ஓத்தடிப்பாதெ அதாங்க.

வா. ஆனால் நீ முன்னே போ.

பன. போ-போரேன். என்னெ பின்னாலே அறஞ்சுடா திங்க தாயே.

வா. இல்லை, இல்லை. நீ போ.

[இருவரும் போகின்றார்கள்.]

---

## இரண்டாவது அங்கம்.

### ஐந்தாங் களம்.

இடம்:—ஹஸ்தினாபுரத்து அரண்மனையில் ஓர் அறை.

காலம்:—காலை.

குநரகர்மன் யோசித்தவண்ணம் வருகின்றான்.

குரு. ஏன் இன்னும் பணகேஸரியைச் சேவகர்கள் கொண்டு வரவில்லை? ஒருகால் அவர்களைக் கொன்றுவிட்டு அவன் தப்பித்துக் கொண்டானோ? உம்—என்ன சூரனாயிருந்தாலும் அவனைப் பிடிக்கச் சென்ற அந்த

வீரர்களை எல்லாம் வெல்ல அவனால் முடியுமோ? இல்லை- இல்லை. பின்னர் என்ன தாமதம்? அவர்கள் என்னை மோசஞ் செய்திடுவார்களா? செய்தாலுஞ் செய்வார்கள்! ரணகேஸரி சேனாதிபதியாய் இருத்தலினால் அவன் வார்த்தையை மீறி நடக்கப் பயந்து என்னை மோசஞ் செய்தாலுஞ் செய்வார்கள். ஆம். இந்த ரணகேஸரி இங்கிருக்குமளவும் எனக்கு நித்திரை என்பது இனி உண்டாகாது. அம்மட்டும் நான் இப்பொழுது அவனைக் காவலில் வைத்தது நலமாயிற்று. நான் எண்ணியபடி அப்பழியை அவன் மீது சாற்றி, அது காரணமாக நகரமாந்தர் அவனை வெறுக்கச் செய்து, அவனை உடனே இந்நாட்டை விட்டுத் துரத்த வேண்டும்.—ஆ ஹா! இதென்ன ஆரவாரம்? ஓ ஹோ! அவனை அழைத்து வருகிறாற் போலிருக்கின்றது.

[சேவகர்கள் ரணகேஸரியின் கைகளுக்கு விலங்கிட்டு அழைத்து வருகிறார்கள்.]

ரண. விடுங்கள் என் கைகளை. என்ன யோசிக்கின்றீர்கள்? விடமாட்டீர்களா? உங்களுடன் வந்தவர்களின் கதியை நீங்களும் அடையவேண்டுமா என்ன? ஆ ஹா [தன் கைவிலங்குகளிலிருந்து திமிறி விடுவித்துக் கொண்டு] குரூரகர்மா! என்னை என்ன காரணத்திற்காகக் காவலிலிட்டாய்? சொல் உடனே.

குரு. உம்—உனக்குக் காரணங்கூட சொல்லவேண்டுமா?

ரண. அத்தாக்ஷியின்றி ஒருவனைச் சிறையிலடைக்க என்ன நியாயமிருக்கின்றது?

குரு. அரசன்மீது அநியாயமாய் அபாண்டமான குற்றத்தைச் சாட்டினதற்காக.

ரண. என்ன குற்றம்?

குரு. அதைச் சொல்லவேண்டுமோ? நான் வாஸந்திகையைக் கொன்றுவிட்டேனென்கிற பழியை என்மீது சாற்றி நகரமாந்தர்கள் என்னை வெறுக்கும்படி செய்தது.

ரண. நான்! நானு சொன்னேன்? இதற்குச் சாக்ஷிகளெங்கே?

குரு. உலகமே சாக்ஷி. மேலும் எனது ஆப்தர்கள் அநேகர் கூறினார்கள் உன்னுடைய துரோஹமான எண்ணத்தைப்பற்றி. நான் உன்னுடைய அரசனென்று கருதாது என்மீது பழிசாற்றின யல்லவா? நான் உன்னை எனதுயிர் நண்பனென்று நம்பியிருக்க நீ எனக்குத் துரோகஞ் செய்தாயல்லவா? அடே ரணகேஸரி, சிநேகத் துரோகஞ் செய்ததோடுபோகாது எனக்கு ஊழியனென்பதையும் மறந்து உலகோர் என்மீது ஸ்திரீ ஹத்தி தோஷம் ஏற்றும்படி செய்த எஜமானத் துரோகி, நீ பாவி! உனக்கு என்ன தண்டனை விதித்தால்தான் தகாது. [யோசித்து] உம்—உன்னை உயிருடன் வைப்பது தவறு.

ரண. அடே, குரூரகர்மா! என்ன சொன்னாய்? [ரணகேஸரி தன்னுடைய கத்தியை உருவ சேவகர்கள் அவன் கைகளைப் பிடித்துக் கொள்ளுகிறார்கள்.]

குரு. அடே, ரணகேஸரி, உனக்கு நான் அரசனென்று கருதாது உன் மூர்க்கத்தனத்தைக்காட்டி என்னைக் கொல்ல வந்தாயல்லவா? நீ இந்த க்ஷணமே இந்நாட்டைவிட்டு ஓடிப்போக வேண்டும். உன்னை இப்பொழுதே கொன்றிருப்பேன். ஆயினும் எனக்கு முன் உன்மீதுள்ள சிநேகத்தைக்கருதி உன்னை இப்பொழுதுவிட்டேன். நாளை இந்நகரில் உன்னை எவ்விடத்திற்கண்ட

போதிலும் முன்பின் யோசியாது கொன்றுவிடும்படி இதோ கட்டளைசெய்கிறேன். பாவி! பிழைத்துப்போ.

ரண. அடே, குரூரகர்மா! உன்னுடைய எண்ணம் இப்பொழுதல்லவோ தெரிந்தது. என்னை வஞ்சனையாக மோசஞ் செய்து இவ்விராஜ்ஜியத்தைக் கைப்பற்றிக்கொண்டு ஒரு பாவமு மறியாத என்மீது அபாண்டமான பழி சுமத்தினாய். நீ ஒரு பெரும் பாதகன்! அடே! நானே உன்மீது படையெடுத்துவந்து உன்னை என் கையாற் கொன்று இவ்விராஜ்ஜியத்தை மீட்டு வாஸந்திகை உயிருடனிருப்பாளாகில் அவளுக்குக்கொடுத்து விடுகிறேன். இது சத்தியம்! அப்படிச் செய்யாவிடில் நான் என் பிதாவுக்குப் பிறந்தவனன்று. பாதகா! நீ கெட்டாய். காட்டுகின்றேன் பார் ரணகேஸரியின் சாமர்த்தியத்தை. [போகின்றான்.]

குரூ. ஆகட்டும். அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம்.— வீரர்களே நீங்கள் போகலாம். இப்போது நான் ரணகேஸரியைப்பற்றிச் சொன்னது உங்களுக்குக் கவனமிருக்கட்டும்.—சரிதான் போங்கள். [சேவகர்கள் போகிறார்கள்.] இந்த ரணகேஸரி என்னமோ பிதற்றிவிட்டான். அப்படிச்செய்ய இவனால் முடியுமா? முதலில் வாஸந்திகை எங்கிருக்கிறாளென்று இவன் அறியக்கூடும்? அப்படித் தேடிப்பிடித்தாலும் சேனை சேர்க்க இவனால் எவ்வாறு முடியும்? சீ! இதைப்பற்றி நான் ஏன் இப்பொழுது கவலைப்படவேண்டும்? வரும் பொழுது பார்த்துக்கொள்வோம். காலதாமதஞ்செய்யாது உடனே ஜெயந்தனைச் சேனாதிபதியாக்கி இன்னும் சேனை சேர்த்துக்கொள்ளவேண்டும். இனி ஒரு க்ஷணமும் வீணில்கழிக்கலாகாது. [போகிறான்.]

# மூன்றாவது அங்கம்.

## முதற் களம்.



இடம்:—விராட தேசத்து அரண்மனையில், சுகுமாரனுடைய அந்தரங்கமான அறை.

காலம்.—மாலை.

சுகுமாரன் வாஸந்திகையின் படத்தைக் கையிலேந்தி அவளது அழகைப்பார்த்து ஆனந்தங்கொண்டு மஞ்சத்தின்மீது சாய்ந்து கொண்டிருக்கின்றான்.

சுகு. ஆ ஹா! ஈசன்செயலை அறிந்தவர் யார்? அவருடைய செயல் ஒவ்வொன்றும் புகழத்தக்கதாகவே யிருக்கின்றது. ஆயினும் உலகில் சகல பிராணிகளையும் படைக்கும் பிரமனிடத்திலும் வஞ்சகமென்ப திருக்கின்றதே! நானும் இதுவரையிலும் எத்தனையோ இராஜகுமாரிகளின் படங்களைப் பார்த்திருக்கின்றேன். இவளுக்கு இணையாக ஒரு ஸ்திரீயையாவது காணவேயில்லை உம்—பிரமன் உலகிலுள்ள அழகையெல்லாம் ஒன்றுகச்சேர்த்து இம்மாதைச் சிருஷ்டித்திருக்கவேண்டும். இம்மாதரசியின் அழகை எவ்வாறு புகழ்வேன்?—இப்பொழுதல்லவோ தெரிகின்றது என்னைப் பெற்றோர்கள் இக்கன்னிகா ரத்தினத்தை விவாகஞ் செய்து கொள்ளும்படி என்னை வற்புறுத்திய காரணம். சீ! என் ஜன்மம் என்ன ஜன்மம்? இம்மண்ணுலகை யாண்டு வரும் மன்னன் மகனாய் யான் பிறந்தும் மகிழ்வோடு இம்மங்கையை மணஞ்செய்து இன்புற்று வாழாத ஜன்மம் வீண்ஜன்மமே! ஈசன் இவ்வொரு பெண்ணைச் சிருஷ்டிக்கவேண்டி மற்றப் பெண்களை யெல்லாம்

முன்பு சிருஷ்டித்துப் பழகினவனாதல்வேண்டும். இப் பெண்மணி சிறுவயதில் இருந்த அழகிற்கும் இப்பொ ழுது இருப்பதற்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கின் றது! பார்க்கப்பார்க்க என்மனம் பரவசமாகின்றதே! ஆஹா! இதுஎன்ன? அந்நங்கையின் கூந்தலா, அல் லது என் உயிரைப் பிணிக்கவரும் ஓர்வலையா? இக்கண் களை எப்படி எழுதினன்? ஒருகண்ணை எழுதிய உட னே அது அவனுடைய இரண்டு கண்களையும்பறித்து விடவில்லையா? இவளைப் பார்ப்பதற்கு இந்த இரண்டு கண்கள்போதுமா? இவளை இப்படத்திற் கண்டதும் என்மனம் உருகுகின்றதே! என்விடாய்தீர இவள் அழகை அள்ளி யள்ளி உண்ணலாம்போலத் தோன்று கிறதே! என்செய்வேன்? ஆ! என் மனத்தைக் கொள்ளை கொள்ளும் மாதரசீ! உன்னை நான் நேரிற் காணக் கொடுத்து வைக்கவில்லையே! நீயோ இப்பொ ழுது சக்கிரவர்த்தினியாய்விட்டனையாம்! உன்னை நா னெப்படி காண்பது?— என்னைப் பெற்றோர்கள், அடிக்கடி என்னிடம்வந்து "வாஸந்திகையைவிவாகஞ் செய்துகொள்" என்று கேட்டுவந்தவர்கள் இப்போது சிலநாட்களாய் இந்த சமாசாரத்தைக் குறித்து ஒன் றும் பேசுவதேயில்லை. என்ன காரணமோ? அவர்கள் என்னைக் கேட்டபோது நான் எனக்கு விவாகமே வேண்டாமென்று மறுத்து வர, மனம் நொந்து சும்மாவிருக்கின்றார்களோ? ஆ! இப்பெண்மணியின் படத்தை எனக்கு முன்பே காண்பித்திருப்பார்களா யின் நான் அவர்கள் விருப்பத்தை மறுத்திருப்பே னோ?—ஈசனே! நான் இப்பொழுதெப்படி சங்கோச மின்றி எனது பெற்றோரிடஞ் சென்று இம்மாதரசி யை எனக்கு விவாகஞ்செய்து வைக்கும்படி கேட்

பது? கண்மணி, வாஸந்திகா! உன்னைத்தவிர வேறெந்த ஸ்திரீயையாவது நான் விவாகஞ் செய்துகொள்வதில்லை! இது சத்தியம். என் காதலி! வேட்கை யென் மீதூர்ந்து செயலறச்செய்கின்றதே. ஏ, ராஜநந்தனி! உன் கனிவாயைத் திறந்து எனக்கு ஒரு வார்த்தை சொல்லலாகாதா?. சுந்தரீ! என் புத்தி மயங்குகிறதே! என் செய்வேன்? [மஞ்சத்தின்மீது சாய்கிருன்.] ஐயோ! நான் அதிர்ஷ்ட ஹீனன்! எப்பொழுது உன் வாயமுதம் அருந்தப்போகின்றேன்? [படத்தை முத்தமிட்டவண்ணமே மெய்ம்மறந்து உறங்கிவிடுகின்றுன்.]

கருணுகரன் வருகின்றுன்.

கரு. [மெல்ல தனக்குள்] என்ன இது? எனது நண்பர் இன்னும் உறங்குகின்றுர்? குதிரைப் பந்தயத்திற்குப் போகவேண்டுமென்று என்னை வரச்சொன்னவர் ஏன் அயர்ந்து தூங்குகின்றுர்? நித்திரையைக் கலைப்போமா?— இளவரசே!— இளவரசே!

சுகு. [உறக்கத்தில்] வேண்டாம்— கண்மணி — வேண்டாம்.

கரு. ஆ! இதென்ன இது? இளவரசர் உறக்கத்தில் என்னவோ பிதற்றுகின்றுர்? தேகசவுக்யமில்லையோ? அப்படியிராது — இன்னும் என்னவோ பிதற்றுகின்றுரே.

சுகு. [உறக்கத்தில்] காதலி! வாஸந்திகா!

கரு. ஓஹோ! வாஸந்திகையிடத்து வேட்கை வைத்துவிட்டாற்போலிருக்கிறது. சரிதான். நேரமாகின்றது. இப்பொழுது எழுப்பாவிட்டால் பிறகு என்மீது கோபங் கொள்ளுவார். நமது வேலையை நாம் செய்து விடுவோம். [மஞ்சத்தின் சமீபம் சென்று சுகுமாரனைத்தட்டி] இளவரசே, இளவரசே, எழுந்திரும்.

சுகு. ஆ! கண்மணே, வாஸந்திகா! [கருணாகரனை ஆலிங்கனம் செய்துகொள்ளுகின்றான்.]

கரு. இளஅரசே! என்ன இது?

சுகு. கருணாகரா! [தனக்குள்] சீ! நானென்ன செய்தேன்?

கரு. இளவரசே! சற்று உட்காரும். தேகத்திற்கென்ன?

சுகு. அப்பா, கருணாகரா! நானென்ன சொல்லுவேன்? இவ்வேதனைப்பட்டுக்கொண்டு இன்னும் இவ்வுலகில நான் ஏன் உயிருடனிருக்கின்றேன்?

கரு. இளவரசே, இதென்ன விபரீதம்? தமக்கென்ன? உடனே சொல்லும், அதற்குத் தகுந்த மருந்து தேடுகின்றேன்.

சுகு. மித்திரா, எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போலிருக்கிறது.—ஆ! வாஸந்திகா! வாஸந்திகா!

கரு. ஐயனே, இதென்ன? வாஸந்திகையைப்பற்றியோ வருந்துகின்றீர்?

சுகு. என் உயிர்த்தோழா, என் கனவில் வந்து என் மனத்தைக் கவர்ந்துகொண்ட என் காதலி, வாஸந்திகையை நான் சீக்கிரம் அடையாவிட்டால் என் உயிர்நில்லாது.

கரு. இளவரசே, இதற்கோ தாம் இவ்வளவு வருந்துவது? தம்மைப் பெற்றவர்களோ தமக்கு அப்பெண்ணரசியை விவாகஞ் செய்துவைக்க வேண்டுமென்று எண்ணியிருக்கின்றார்கள். அப்படியிருக்கத் தாம் இதற்கு வருந்துவானேன்?

சுகு. நேயனே, என் மனோன்மணியை நான் எப்பொழுது காணுவேன்? இதுவரையிலும் நம்மிருவருக்குமுள்ள சிநேகத்தை எண்ணியாவது என் மனதிற் கினியாளை

நான் சீக்கிரம் அடையும்படி செய். உன்னை யானென்றும் மறவேன்.

கரு. இதென்ன ? தாம் இப்படிச் சொல்லுகின்றீர் ? இந்த க்ஷணமே தாம் வாஸந்திகையை அடையும் மார்க்கத்தைத் தேடுகின்றேன், சந்தேகம் வேண்டாம். இளவரசே, உமது தந்தையிடம் நீர் வாஸந்திகையை விவாகஞ் செய்துகொள்ளமாட்டேனென்று முன்பு சொன்னீரே, அதன் பிறகு உமது தந்தை இவ்விஷயத்தைப்பற்றி ஒன்றும் பேச வில்லையோ ?

சுகு. நண்பனே, பேசவே யில்லை. அதைப்பற்றி மறுபடி கேட்டிருந்தால் நான் எவ்வளவு சந்தோஷமுடையவனாயிருப்பேன் ?

கரு நீர் அன்று வாஸந்திகையை மணம் புரியேனென்று மறுத்ததற்காக உமது பிதா மனம் வெறுத்திருக்கின்றாரோ ? அல்லது உமக்கு வேறு தகுந்த இராஜ கன்னிகை யாரென்று விசாரணை செய்துகொண்டிருக்கின்றாரோ ?

சுகு. கருணாகரா, இப்பொழுதே சொன்னேன். நான் எனது காதலி வாஸந்திகையையன்றி வேறெந்தஸ்திரீயையும் மணம் புரியேன், கண்ணெடுத்துப் பார்க்கவும் மாட்டேன். வாஸந்திகையை அடையாவிடில் துறவியாய்விடுவேன் என்பது திண்ணம்; இல்லையாயின் உயிரை மாய்த்துக்கொள்ளுவேன், இது சத்தியம்.

கரு. அப்படிப்பட்ட கொடிய காரியத்தைத் தாம் செய்யாதிருக்கும்படி கடவுள் கிருபை செய்வாராக.

ஒரு கிருபத்துடன் வீரசேனன் வருகின்றான்.

வீர. அப்பா சுகுமாரா, அழிந்தது ஹஸ்தினபுரம் !

சுகு. என்ன?

கரு. என்ன, என்ன! மகாராஜா?

வீர. இதோபார். [நிருபத்தைக் கருணாகரனிடங்கொடுக்க அவன் அதைவாங்கி வாசிக்கின்றான்.]

கரு. ஹஸ்தினாபுரத்து—மன்னன் மகள்-வாஸந்திகையை—குரூரகர்மன்—மோசஞ் செய்து-இராஜ்யத்தை—அபகரித்துக்கொண்டு—அம்மாதையுங் கொன்று விட்டதாகக்கேள்வி—இந்த—

சுகு. ஆ! வாஸந்திகா! [மூர்ச்சையாகின்றான்.]

வீர. என்ன! என்ன! சுகுமாரா?

[கருணாகரன் சுகுமாரனுடைய முகத்தில் ஜலத்தைச் சற்றுதெளித்து விசிறியைக் கொண்டு வீசுகின்றான்.]

கரு. மகாராஜா, இக்கடிதம் எழுதினது யார்?

வீர. அந்நகரத்திலுள்ள எனது நண்பர் சுபுத்தி எழுதியிருக்கின்றார்.

கரு. ஐயோ பாவம்! ஸ்திரீயென்றும் பாராமற் போனானே அப்பாதகன்? இளவரசர் அப்பெண்ணரசியின்மீது எவ்வளவோ காதல்கொண்டிருக்கின்றாரே. எல்லாம் கெட்டுவிட்டதே.

வீர. [ஆச்சரியத்துடன்] அவளை விவாகஞ் செய்துகொள்ள சுகுமாரனுக்கு இஷ்டமோ?

கரு. மஹாராஜா, இத்தனை நாட்கள் தான் வாஸந்திகையை விவாகஞ் செய்து கொள்ளுவதில்லையென்று கூறி வந்தவர் ஏதுகாரணமோ இப்பொழுது அப்பெண்மணியை நினைத்து நினைத்து மிகவும் வருந்தி பித்துக் கொண்டிருந்தார்; நான் தங்களிடஞ்சொல்லி எப்படி

யாவது வாஸந்திகையை அவருக்கு விவாகஞ் செய்துவைத்து விடுவதாகச் சொன்னபிறகே, அவர் சற்று தேறுதலடைந்தார்; அதற்குள் தம்மால் இப்பரிதாபமான சமாசாரம் தெரியலாயிற்று. நாமொன்று நினைக்கத் தெய்வம் மற்றொன்றாக முடிக்கின்றது!

வீர. அப்படியா? இப்பொழுதென்ன செய்வது?

சுகு. [மூர்ச்சை தெளிந்து தனக்குள்] காதலி! உன் விதி இப்படியோ ஆயிற்று?—என் ஆசையொழிந்தது!—கண்ணே, வாஸந்திகா! வாஸந்திகா!—[கருணாகரனைப் பார்த்து] இனி ஒழிந்தது இல்லற வாழ்க்கை எனக்கு.

வீர. சுகுமாரா, என்ன எண்ணம் இது? க்ஷத்திரியனாகிய நீ இவ்வாறு செய்யலாமோ?

சுகு. அண்ணா, தாம் என்னை மன்னிக்கவேண்டும். நான் சபதஞ் செய்துவிட்டேன், அதினின்றுந் தவறேன்.

வீர. குமாரா, இப்படியும் சபதஞ்செய்யலாமோ? என்வமிசம் என்னவாவது?

சுகு. என்னை மன்னிக்கவேண்டும்.

வீர. சுகுமாரா, என்னை நீங்கா விசாரத்துக் காளாக்கவோ உன்னை நான் பெற்றது? என்னை முதலில் கொன்றுவிட்டு பிறகு நீ உன்னிஷ்டப்படி செய்.

சுகு. ஈசனே! ஈசனே!— அண்ணா, கோபங்கொள்ளாதீர். தமக்காக என் பிராணனை வைத்துக் கொண்டிருக்கின்றேன். ஆயினும் தாம் என்னை விவாகஞ்செய்துகொள்ளும்படி வற்புறுத்தலாகாது. தங்களை மிகவும் வேண்டிக்கொள்ளுகிறேன்.

வீர. உன்னுடைய பிடிவாதத்தை இன்னும் விடமாட்டாய்? இதுதான் என் விதி—போலும்.

சுகு. அண்ணா, என்மீது வெறுப்புக்கொள்ளாதீர். எனக்கு இனி உலகவாழ்க்கையில் மனஞ்செல்லாது. துறவிகளையுந் தவச்சிரேஷ்டர்களையும் தரிசித்து அவர்களுடைய உபதேசத்தைப் பெறவேண்டுமென்றெண்ணுகின்றேன். அதற்குத் தாம் தடைசெய்யலாகாது.

[தன் தந்தை கொண்டுவந்த நிருபத்தைப் படிக்கின்றான்.]

கரு. [வீரசேனனிடம்] மஹாராஜா, தாம் இப்பொழுது இளவரசரிடம் "உன் இஷ்டப்படிசெய்" என்று சொல்லிவிடுங்கள். அவர் மனம் இப்பொழுது மிகுந்த சஞ்சலத்தை யடைந்திருக்கின்றது. பிறகு நான் அவர் மனத்தைத் தேற்றிவிடுகின்றேன்.

வீர. குமாரா, உன்னிஷ்டப்பிரகாரமே செய். துறவறத்தையே மேற்கொள். ஆயினும் இந்நகரைவிட்டு மாத்திரம் போய்விடாதே.

ஒருசேவகன் வருகின்றான்.

சே. மஹாராஜா, நமது நகர்ப்புறத்திலுள்ள சத்திரத்தில் சில நாட்களாகத் திருடர்கள் தொந்தரை அதிகமாகிவிட்டபடியால் குடிகள் அக்கஷ்டத்தைப் பொறுக்கமாட்டாது தங்களிடம் முறையிட்டுக்கொள்ள வாயிலில் நிற்கின்றார்கள்.

வீர. என்ன?

சுகு. எனக்கு உத்தரவளியும், நான் தக்கஏற்பாடு செய்கின்றேன்.

வீர. சரி.—[தனக்குள்] இவ்வழிகளாவது அவன்மனம் மாறுபடட்டும்.

சுகு. (சேவகனைப்பார்த்து) நல்லது ஐந்துவீரர்கள் மாறுவேடம்பூண்டு அச்சத்திரத்தண்டை இருக்கட்டும், நானும் மாறுவேஷத்துடன் வருகிறேன். இன்றைக்கு அத்திருடர்களைப் பிடித்துவிடுவோம். இதைக்குறித்து குடிகளைப் பயப்படவேண்டாமென்று சொல், போ.

சே. கட்டளைப்படி, அரசே. [போகின்றான்]

வீர. நல்லது நான்போய்வருகின்றேன். கடவுள் துணைபுரிவாராக. [போகின்றான்.]

கரு இளவரசே, நானும் போய்வருகின்றேன். ஆயினும் ஒருவிஷயம். தாம் அதைச் சற்று கேட்கவேண்டும். யோசித்துப்பார்த்தால் மஹாராஜா சொல்லியவெல்லாம் நியாயமென்று தோன்றும். தாமோ அவருக்கு ஒரே புத்திரர். அரசகுலத்தை நிலை நிறுத்த வேண்டியவர். தாம் முதலில் செய்த சபதமென்ன? வாஸந்திகையை விவாகஞ் செய்துகொள்ளாவிடில் துறவியாய்ப்போவது, அல்லது உயிரை மாய்த்துக் கொள்வது, இது தானே தமது சபதம்?—வாஸந்திகை உண்மையில் உயிருடனிருந்து தாம் அம்மாதை விவாகஞ்செய்துகொள்ளாம லிருந்தாலன்றோ தம்முடைய சபதத்தின்படி தாம் நடக்கவேண்டும்? இப்போது வாஸந்திகை இறந்துவிட்டபடியால் தாம் தமது தந்தை சொற்படி வேறொரு கன்னிகையை மணஞ் செய்துகொள்வீராஞல் அப்போது தமது சபதத்தினின்றும் தவறினவர் ஆகமாட்டீர். மேலும் பெற்றோர்களின் மனதைப் புண்ணாக்கலாமோ? விவாகஞ்செய்துகொள்ளாமல் துறவுபூண்டு தமது உயிரைவிட்டால் தமது தாய்தந்தையர்கள் புத்திரசோகத்

தால் மிகவும் வருந்தார்களா? இதைத்தா மெண்ண வேண்டாமா? தாமே சற்று ஆலோசித்துப் பாரும்.

சுகு. எனக்கு இப்பொழுது ஒன்றும் தோன்றவில்லை. என்னைத் தனியாய் விட்டுவிடு. நொந்திருக்கின்றேன்.

கரு. சரி, ஆனால் நான் காலையில் வருகின்றேன்.

[போகின்றான்.]

சுகு. மாயவலையிற் சிக்கி இம்மானிடப்பதர்கள் தத்தளிப்பது—ஆஹா! என்ன ஆச்சரியம்! மணஞ்செய்து கொள்ளே னென்றவனுக்கு ஒரு சிறு படத்தைக் கண்டு மணஞ்செய்ய வேண்டுமென்கிற ஆசைஉண்டாவது! உண்டானபோதே தீரா மையல் கொள்வது! கொண்ட நேரத்திற்குள்ளாக அவ்வாசைக்குப்பங்கம் நேரிடுவது! நேரிட்ட உடனே அத்துயரந்தாளாது மனம் வெறுத்துச் சபதம் செய்வது! அதற்குள்ளாக அதற்குப் பல தடைகள் நேரிடுவது! இவ்வளவு சுக துக்கங்கள் ஒரு தினத்தில் ஒரே க்ஷணத்தில் ஒன்றின் மீதொன்றாய் நேரிட்டால் யாரை நோவது?—என்ன செய்வது?— [பெருமூச்செறிந்து] எல்லாம் ஈசன் திருவிளையாடல்களே!— [மணி ஓசை கேட்க] அதோ, சந்திரசேகரருடைய சந்தியாகால ஆராதனை மணி ஓசை—ஆஹா!—மறந்தேன்—இன்றிரவு சத்திரத்திற்குப்போய்த் திருடரைப் பிடிக்கவேண்டுமல்லவா? அதற்கு வேண்டிய முயற்சி செய்யவேண்டும். காலமாயிற்று. [போகின்றான்.]

---

# மூன்றாவது அங்கம்.

## இரண்டாங் களம்.

இடம்:—விராடதேசத்தில் ஓர் சத்திரம்.

காலம்.—இரவு.

*கமலினி தான் கொண்டுவந்த நகைப்பெட்டியை சத்திரத்தின் திண்ணையில் இறக்கிவைத்து இளைப்பாறுகின்றாள்.*

ஐயோ! ஈசனே! நான் பட்டபாடு போதும் போதும் போதுமென்றாயிற்று. ஐயோ! கஷ்டகாலத்திற்குத் தக்கபடி புத்திசாலிகளுக்குங்கூட மதி குறைந்து போமா? நான் எத்தனைத் தரஞ் சொன்னேன்? நான் குறித்த இடத்தில் தேவி காத்திருக்க லாகாதா? நான் சிறைச்சாலையை விட்டதும் நேராக மந்திரி குணலயர் வீட்டிற்குச் சென்று அவரைக் காணாது பிறகு உடனே இப்பெட்டியை எடுத்துக்கொண்டு வருவதற்குள் தேவி வழிதப்பிப் போகவேண்டுமா? நான் தேவியை எங்கென்று தேடுவேன்? விலை யுயர்ந்த நகைகளையுடைய இப்பெட்டியைக் காடுமலைகளெங்குஞ் சுமந்து நான் அவதிப்பட்டது அந்த ஜகதீசனுக்குத்தான் தெரியும். இதனால் ஒரு க்ஷணங் கழிவது ஒரு யுகமாயிருக்கிறது. அம்மட்டும் இந் நகரத்தையாவது அடைந்தது நான் முன்செய்த பூஜாபலனேயாம்.—ஐயோ பாவம்! வாஸந்திகாதேவியின் கதி என்னவாயிற்றோ ஒன்றுந் தெரியவில்லை. என்னைப்பற்றி தேவி என்ன நினைக்கின்றாளோ? ஆயினும் நான் துரோகஞ் செய்துவிட்டேன் என்று நினைக்கவே மாட்டாள். ஒரு வேளை துயரந் தாங்க

முடியாது உயிரை மாய்த்து விட்டாளோ அல்லது வனவிலங்குகளுக்கு இரையாய் விட்டாளோ? தெய்வமே! இக்கஷ்டத்திற்கு நான் என்ன செய்வது? ஐயோ! சுகுமாரியான இராஜகுமாரிக்கும் இந்தக்கதி வாய்க்குமோ? போதாக்குறைக்கு நானும் அலைந்து திரிய வந்துவிட்டதே! என் தந்தை என்னைப்பற்றி என்ன கவலைப்படுகின்றாரோ? அந்தப்பாதகன் குரூரகர்மன் அவரை இம்சிக்கின்றானோ? இதை நினைத்தால் என் உள்ளம் பரிதவிக்கின்றதே! என்ன செய்வேன்? நான் இவ்வளவு துயரத்தை யனுபவித்தும் தேவியை யாவது காப்பாற்றினேனா? தேவியைக் காண்பேனாயின் நான் பட்ட துன்பங்களை யெல்லாம் மறந்து விடுவேனே.—ஈசனே! என்மேற் கருணை வைக்கலாகாதா?—யார் வருகின்றது?— காவற்காரன்போலும். நான் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும் இப்பெட்டியை வைத்துக்கொண்டு.

ஒரு சேவகன் வருகின்றான்.

சே. யாரம்மா அது? எந்தவூர்? எங்கே வந்தே? உன் பேரென்ன?

கம. ஐயா, நான் ஒரு ஏழைத் தாதி, என் பெயர் விசாலாக்ஷி. நான் சற்று சயனித்துப் போகலாமென்று வந்தேன். இங்கு படுத்திருக்கலாமா?

சே. ஸ்திரீகளுக்குஏற்பட்ட இடம் இண்ணைக்கு இதுதான். இங்கே இருக்கலாம் அம்மா. ஆனால் ஜாக்கிரதையா யிருக்கணும். இங்கே திருடர் பயம் உண்டு.

[சேவகன் போகின்றான்.]

கம. அப்பா! அம்மட்டும் இவன் என்னைத் தொந்திரவு செய்யாது ஒழிந்தானே. இனி இவ்விடம் சற்று படுத்துக்கொள்வோம். [படுக்கின்றாள்.]

மற்றொரு சேவகனும் ரணகேஸரியும் பேசிக்கொண்டு வருகின்றார்கள்.

சே. அது முடியாதையா.

ரண. உனக்குப் புண்ணியமுண்டு. தேடிவந்த இராஜகுமாரத்தி இச்சத்திரத்தில் வந்திருக்கலாம்.

சே. என்ன ஐயா, நீர் சொல்லுவது? இராஜகுமாரத்தியாவது வெளியே வருவதாவது? அப்படிப்பட்ட இராஜகுமாரத்தி யாரையா?—அதிருக்கட்டும், அந்த இராஜகுமாரத்தியைத்தேட நீர் யார் ?

ரண. அந்த விஷயம் உனக்குத் தெரிந்து என்ன பயன் ?

சே. உம்முடையவிஷயம் அவ்வளவு இரகசியமாயிருக்கும் பக்ஷத்தில் உம்மை உடனே இளவரசரிடங்கொண்டு போய் நிறுத்தவேண்டியது என் கடமை.

ரண. என்னை யார்முன்பாகக் கொண்டுபோய் நிறுத்தினாலும் நிறுத்து, எனக்குப்பயமில்லை. நான் கேட்டுக்கொண்ட உபகாரத்தைமாத்திரம் செய்துவிடு.

சே. உம்முடைய சமாசாரமாகவே இருக்கின்றதே யொழிய நான் கேட்டதற்குப் பதில் காணேம். ஏன் அவ்வளவு அவசரம், என்னைத் தொந்திரவு செய்கின்றீரே? நீர் தேடிவந்த இராஜகுமாரத்தி யார் ? எங்கேயிருப்பது? எல்லாந் தெரியச் சொல்லும்.

கம. [படுத்தவண்ணமே தலை நிமிர்ந்து பார்த்து] இது யாரோ தெரியவில்லையே! குரல்மாத்திரம் நான் அறிந்ததுபோலிருக்கின்றது. யாரா யிருக்கும் ? இராஜ குமாரத்தியைத் தேடுவானேன்? நமது தேவியைத் தேடும்படி பாதகன் குரூரகர்மன் அனுப்பின ஆளாயிருக்குமோ? ஐயோ ! என்னை இவன் கண்டுவிட்டால் என்ன செய்

வது?—நல்லது, இன்னும் என்ன பேசுகின்றார்களோ கேட்போம்.

ரண.—உன்னுடைய கேள்விக்கு நான் மறுமொழி சொன்னால் அது ஆச்சரியத்தையும் பயத்தையும் விளைவிக்கும். உனக்கேன் வருத்தம்? நான் தேடிவந்திருப்பது வாஸந்திகாதேவியை.

சே. யாரை?

ரண. விக்ரமவீரருடைய புத்திரியை.

சே. ஹஸ்தினுபுர சக்கிரவர்த்தினியையா ?

ரண. ஆம் !

கம. ஆ! ஆ! நான் எண்ணினது உண்மையாயிற்றே! நான் என்செய்வேன்?

ரண. என்பெயரை வெளியிடுவதென்றால் எனக்கே வெட்கமாயிருக்கிறது. ஆயினும் நகரும் பெயரும் ஒழிந்த எனக்கு இனியென்ன வெட்கமிருக்கின்றது ?

சே. ஏன் ஐயா? உமக்கு ஊரும் பேரு மில்லையா ?

ரண. என்மனதை ஏன் புண்படுத்துகின்றாய்?நிரபராதியான தேவியையும் என்னையும் என் குடும்பத்தையும் பரிதவிக்கச் செய்தானே அந்தக் கொடும்பாதகன், அவனைக்கொன்று பழிவாங்கி இராஜ்ஜியத்தைமீட்டு வாஸந்திகாதேவிக்குக்கொடுப்பதாக நான் பிரதிக்ஞைசெய்திருக்கின்றேன். அதற்காகவே வாஸந்திகாதேவியைத் தேடுகின்றேன். இங்கே ஏதாவது புலம் தெரியும் என்றுதான் நான் ஸ்திரீகளிருக்கும் இடத்தைப்பார்க்கவேண்டுமென்று கேட்டது.

சே. என்ன! அப்படியா ?

கம. யாரோ தெரியவில்லையே. ரணகேஸரியின் குரல்போல் தோன்றுகின்றது. இருட்டாயிருக்கிறபடியால் அவர் முகமுந் தெரியவில்லையே.

சே. இவ்வளவு சொல்லியும் உமது பெயரை மாத்திரம் வெளியிடவில்லையே ?

கம. என்னவாயிருந்தாலும் காவற்காரன் புத்திசாலிதான்.

ரண. என்பெயரையறிந்து என்னபயன்? பெயரைத்தான் இழந்துவிட்டேனென்று சொன்னேனே. என்னை ரண கேஸரியென்பார்கள், இப்போது ரணபூனை யாய்விட் டேன்.

கம. ஆஹா !

சே. ஐயா, நமஸ்காரம், நமஸ்காரம்! இத்தனைநேரம் தங்க ளோடு வாதாடினதற்காக என்னைமன்னிக்கவேண்டும்.

கம. யார் ? ரணகேஸரியரா ?

ரண. யார் என்பெயர் கூறுவது? வாஸந்திகாதேவியோ?

கம. இல்லை, நான்தான் கமலினி.

ரண. [விரைந்தோடி] ஆ-ஆ ! கமலா ! எங்கே தேவி ? க்ஷேமந் தானோ ? [சேவகன் போகின்றான்.]

கம. தேவியை நான் காணவில்லை. தேவியைத்தான் தேடிக் கொண்டு நான் அலைந்துதிரிந்து கடைசியாய் இங்கு வந்து சேர்ந்தேன்—ஐயோ! அந்தப் பரமசண்டாளன் க்ரூரகர்மன் உம்மை ஏன் துறத்திவிட்டான்?

ரண. மகாராணிக்கே துரோகஞ்செய்தவன் எனக்குத்துரோ கஞ்செய்யாது போவானோ ? நான் இதைச் சிறிதும் முன்யோசனைசெய்யாது அவனுடைய துரோக கிருத் யங்களுக்கு உடன்பட்டிருந்ததற்காகத்தான் ஈசன்

என்னை இப்படி அலையவிட்டார். எனக்கு இப்போது புத்திவந்தது. இனி அந்தத் துரோகியினுயிரைப்பழி வாங்குமளவும் எனக்கு உறக்கமென்பதுண்டாகாது. ஈசன் கருணையால் உன்னை நான் இவ்விடத்தில் சந்திக்கும்படி நேரிட்டது. இதனால் ஈஸ்வரானுக்கிரகம் என் பக்கத்தி லிருக்கிறதென்று தெரிகிறது. இது எனக்கு அதிக உற்சாகத்தையும் என்னெண்ணம் விரைவில் நிறைவேறுமென்கிற நம்பிக்கையையுங் கொடுக்கின்றது.

கம. அப்படியே யாகவேண்டுமென்று நான் கடவுளைப் பிரார்த்திக்கின்றேன். —என் தந்தை சௌக்கியமா யிருக்கின்றாரா?

ரண. அவர் உயிரோடிருக்கின்றார். குரூரகர்மனுடைய ஆளுகையில் யார் சுகமாயிருப்பார்களென்றுசொல்லுவது?

கம. என்ன! அவன் குடிகளை அதிகஇம்சைசெய்கின்றானோ?

ரண. குடிகளை மாத்திரமல்ல, தன் செயல்களை யார் விரும்பவில்லையென்று காணுகின்றானோ அவர்களையெல்லாம் இம்சை செய்கின்றான். உன் தந்தையை யென்ன சும்மா விட்டுவிட்டானா?

கம. என்ன செய்தான்? சொல்லும், சொல்லும்!

ரண. உன்னை எங்கேயோ உன் தகப்பன் ஒளித்துவைத்திருப்பதாய்ப் பழிசாற்றி அப்பாதகன் அவரைக் காவலில் வைத்திருக்கின்றான்.

கம. ஐயோ! தெய்வமே!

ரண. நான் தடுக்கவும் கேளாது அந்த மகாபாதகன் உன் தந்தையைச்சிறையில் வைத்ததுமன்றி அவருக்காகப் பரிந்துபேசிய ஸ்ரீகாந்தரையுங் கொன்றுவிட்டான்.

கம. ஐயையோ! அப்படியா செய்தான் அந்தத் துரோகி? ஐயோ! என் தந்தையின்கதி என்னவாகுமோ தெரிய வில்லையே. நான் இப்போதேபோய் அவரைச் சிறையி லிருந்து விடுவிக்கவேண்டும்.

ரண. கமலா, என்ன பைத்தியக்காரியா யிருக்கின்றாய் நீ! உன்னைக்கண்டுபிடிக்க அவன் தூதர்களை நான்கு திக் கிலும் அனுப்பியிருக்கின்றான். உன்னை மணஞ்செய்து கொள்ளவா அவன் தேடுகின்றான்? இல்லை, இல்லை. நீ வாஸந்திகைக்குத் துணைசெய்தாயென் றனுமானித்து உன்னைப்பிடித்து உயிர் வாங்க உன்னைத் தேடுவிக் கின்றான். முன்னமே தன்பிதா குணலயரை வாஸந்தி கைக்கு உதவிசெய்வாரென்று எண்ணி எமலோக மனுப்பிவிட்டான்.

கம. ஐயோ! என்ன!—தந்தையைக் கொன்றானா பாதகன்?

ரண. ஆம். ஆகையால் ஹஸ்தினாபுரிக்கு இப்போது போ வாயாகில் உன்னைக் குணலயரைப் பின்றொடரும்படி யனுப்பிவிடுவான். உனக்கு உன்தந்தையைக் காப் பாற்ற வேண்டுமென்று எண்ணமிருக்குமாகில் நான் சொல்வதைக்கேள். நீ இங்கிருந்துகொண்டு வாஸந்தி காதேவியைக் கண்டுபிடிக்க முயற்சிசெய். நான் அந் தக் கொலைபாதகன் குரூரகர்மனைக்கொன்று இராஜ்ஜி யத்தைமீட்டு வாஸந்திகாதேவிக்குக் கொடுப்பதாகப் பிரதிக்ஞை செய்திருக்கின்றேன். அப்போதுதான் உனது தந்தையையும் மற்றவர்களையும் நாங்கள் காப் பாற்றமுடியும். நீபயப்படாதே. என்பிரதிக்ஞை நிறை வேறுமென்று என்உள்ளஞ் சொல்லுகின்றது! ஈசன் நம்பினவர்களைக் கைவிடான்! நான் நாளைத்தினம் இவ்வூர் அரசனைக்கண்டு என் பிரதிக்ஞை நிறைவேற

வேண்டிய சகாயஞ் செய்யும்படிகேட்க எண்ணியிருக்கின்றேன். வீரசேனமகாராஜன் நமதுமன்னர் விக்ரமவீரருக்கு உற்ற நண்பர். இன்றிரவு இப்பட்டணம் எங்குஞ் சென்று தேவியைத் தேடப்போகின்றேன் நான். நான் தேவியைப்பற்றிய சமாசாரம் ஏதறிந்தாலும் உடனே வந்து உனக்குத் தெரிவிக்கின்றேன். நீ இவ்விடத்திலேயே இரு, பயப்பட வேண்டாம். நானுன்னை என்னுயிரைப்போல் பாதுகாக்கின்றேன். நான் இப்போது போய்வருகின்றேன்.

கம. உதயத்திற்கு இவ்விடம் வருவீரா?

ரண. வாஸந்திகாதேவியின் செய்திதெரிந்தால் அதை இன்றிரவே உனக்குவந்து தெரிவிக்கின்றேன்.

கம. ஆனால் போய்வாரும். [ரணகேஸரி போகிறான்.] அம்மா, எனக்கு இப்போதுதான் உயிர்வந்தது. இனி நான் தேவியைக் காணுவேன் என்பதிற் சந்தேகமில்லை. ஒருவருக்கு இருவராயிருக்கின்றோம்—ஆ! என் தந்தையைப்பற்றி நினைக்கும்போது என்மனந் தத்தளிக்கின்றதே! ஆயினும் ரணகேஸரிசொல்லுவதுஉண்மையே. தேவியையே முதலில் தேடிக் காணவேண்டும்.—ஜகதீசனே! அருள்செய்யாயா?[படுத்துஉறங்குகின்றாள்.]

வாஸந்திகையும் பனமாரத்தானும் வருகின்றார்கள்.

வா. அடே, இந்தமூன்று தினங்களாய் உன்னோடு நான் பட்ட அவஸ்தை போதும். விராடநகரத்திற்கு வழி தெரியுமென்றுகூறி அன்றையதினம் என்னை கிரிஜாபுரத்திற்கு அழைத்துப்போனாய். ஆயாசம்தீர அங்கு சற்று உட்காரவும் இடங்கிடைக்காது தவித்தலையச் செய்தாய். இப்பொழுதாவது சரியானவழி தெரியுமா உனக்கு? எனக்கு வீணான சிரமத்தை—

பன. தாயே, மன்னிக்கணுங்க, இப்பொ வந்ததுதாஞ் சரி யானவழி. அதோ தெரியுதே மொட்டு மொட்டுண்ணு வெளக்கு அதொரு சத்தரங்க.

வா. அடே, என் கால்கள் நோகின்றன. நீ குறுக்குப் பாதையாக அழைத்து வராமல் எனக்கு வீண் சிரமத்தைக் கொடுத்துவிட்டாய். அதிக பசியுண்டாகிவிட்டது. நான் இப்போதே—

பன. ஆ! ஐஐயோ! தாயே, எங்கொலதேவதே! என்னெக் கொண்ணூடாதீங்க. ெம்பொஞ்சாதி குட்டிங்க அயுவாங்க. காப்பாத்தணுந் தாயே என்னெயும் எங்கொலத்தெயும்— [கும்பிடுகிருன்.]

வா. நான் உன்னைக் கொல்லமாட்டேனென்று முன்னமே சொல்லியிருக்கின்றேனே, நீயேன் பயப்படுகின்றாய்? ஆயினும் நீ என்னைப்பற்றி யாருக்காவது அன்று அங்கு அந்நாட்டுப்புறத்தானிடம் வாய்தவறிக் கூறினபிரகாரம் ஏதும் சொல்லப்போகின்ருய். சொல்வாயாகில் உன்னை உடனே—

பன. ஆ!

வா. பலியெடுத்துக் கொள்வேன்! ஜாக்கிரதை

பன. உம்! உம்! எங்கப்பாணெ நாஞ் சொல்லல்லெ இனிமே.

வா. என்னைச் சாமியாரென்றே கேட்பவர்களுக்கு சொல்லவேண்டும். நீ தெரியுமா?

பன. ஆ—அப்படியேங்க!—இது தாஞ் சத்தரங்க.

வா. நான் இவ்வூரையும் சோதிக்க எண்ணியிருக்கின்றேன். இப்போது இந்தச் சத்திரத்தில் போய்ப்படுப்போம்.

இரவு பத்து நாழிகைக்கு என்னை எழுப்பு. பிறகு எழுந்து போவோம். தெரியுமா?

பன. உம்!—உம்! தாயே!

வா. அடே, நான் இங்கே படுத்துக்கொள்ளுகிறேன். நீ எங்கே படுக்கப் போகிறாய்?

பன. தாயே, நான் இங்கெ படுக்கக்கூடாதுங்க. எங்களுக்கு அங்கே குடிசெ கட்டிவச்சிக்குதே அதாங் தாயே இது சாமியாருங்க படுக்ற எடம்.

வா. நீ போய் அங்கே படுத்துக்கொள். இரவு பத்துநாழிகைக்கு என்னை இங்கே வந்து அழைக்க வேண்டும். தெரியுமா? நீ என்னை விட்டு விட்டு எங்கேயாவது போகாதே. போனால் உன்னையும் உன் குலத்தையும் உடனே—

பன. ஐயோ! தாயே! இல்லெ. இல்லீங்க!

வா. சரி, போ. [பனமரத்தான் போகின்றான்.]

மற்றொருபக்கமாக ஒரு சேவகன் வருகிறான்.

சே. யாரங்கே?

வா. நான் ஒரு சந்நியாசி. படுக்கலாமென்று வந்தேன்.

சே. ஐயா, தாங்கள் இங்கே படுக்கலாகாது. இது ஸ்திரீகள் படுக்கும் இடம். அதோ அந்தக் கடைசிவாயில் வழியாகச் சென்றால் அவ்விடத்திலுள்ள கூடத்தில் படுத்துக்கொள்ளலாம். அதுதான் பரதேசிகளுக்காக ஏற்பட்ட இடம் இன்று. ஆகையால் அங்கே நீங்கள் போங்கள்.

வா. யாராவது என்னை இங்குத் தேடிவந்தால் அங்கே அவர்களை வரும்படி சொல்லி யனுப்புகின்றீரா?

சே. வந்தால் அனுப்புகின்றேன்.

[வாஸந்திகையும் சேவகனும் போகிறார்கள்.]

பனமரத்தான் வருகின்றான்.

பன. ஐஐயோ! அங்கெ குடிசெயெல்லாம் எடுத்தூட்டாங்களாம். எங்களுக்கு வேறெ சத்தரம் இக்குதாம் என்னயெயவா போச்சே. அங்கே போவனும்ணு கொலதேவதெகிட்டச் சொல்லிட்டுப்போவனும். இல்லாப்போனா பலிவாங்கிடும் என்னெ —உம்— இங்கே தான் படுத்திந்தது.

[படுத்திருந்த கமலினியை வாஸந்திகை என்றெண்ணிப் பனமரத்தான் அழைக்க, அவள் பயந்து கூச்சலிடுகின்றாள். அப்பொழுது கொத்தவால் வேடம் பூண்டு தன் சேவகர்களுடன் வந்த சுதுமாரன் பனமரத்தானைப் பிடித்துக்கொள்ளுகிறான்.]

ஐயோ! ஏன்ய்யா? ஏன்யா என்னெ அடிக்கிறிங்கோ. எங் கொலதேவதெயெ எயுப்பவந்தேன்.

சே. யாரடா உன் குலதேவதை இங்கே, கள்ளப்பயலே?

பன. எங்கொலதேவதெ இங்கேதாம் படுத்திந்தாங்க.

சுகு. அடே நீயார்? நீ என்ன ஜாதி? உன் பெயரென்ன? சொல் உடனே. இல்லாவிட்டால் உன்னை இங்கேயே கொன்றுவிடச் சொல்லுவேன்.

பன. ஐயா, [விழித்து நாலாபக்கமும் பார்க்கின்றான்.]

சே. என்ன விழிக்கிறாய் திருட்டுப்பயலே? சொல்.

[பனமரத்தானை அடிக்கிறார்கள்.]

பன. ஐயோ! ஐயோ! தாயே! எங்கே போனெ? ஐயா! நாஞ் சாதிலே பண்ணக்காரே—நாட்டுப்பொறத்தான். எம் பேரு—

சே. சொல்லு.

[பனமரத்தானைச் சேவகர்கள் அடிக்கிறார்கள்.]

பன. ஆ!—பனமரத்தான்—

சுகு. சரிதான். இவன் திருட்டுப்பயல். கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் அடைத்துவிடுங்கள்.

பன. ஐயோ! நாந்திருடவல்லியே. எங் கொலதேவதெயெ எழுப்ப வந்தேன்யா.

சே. கூச்சல் போடாமல் போ. திருட்டுப்பயலே.

[எல்லோரும் போகிறார்கள்.]

வாஸந்திகை வருகிறாள்.

வா. என்ன கூக்குரல்?—நம்முடன் வந்தவன் குரலாயிருந்தது. ஒருகால், பாவம், என்னை எழுப்ப வந்தானோ? ஐயோ! என்ன சங்கடம்!—யாரோ வருகின்றார்கள். நாம் ஈசனைத் தியானித்த வண்ணமிருப்போம்.

[பாடுகின்றாள்.]

சுகுமாரன் வருகிறான்.

சுகு. இன்னும் யாரோ ஒருவன் பாடிக்கொண்டிருக்கிறான். [சற்று உற்றுக்கேட்டு] ஸ்திரீயின் குரலாயிருக்கின்றது. சமீபத்திற் சென்று பார்ப்போம்—[சமீபஞ் சென்று] ஓ! சந்நியாசி. ஆஹா!—இவர் ஏன் இங்கிருக்கின்றார்? போய்க் கேட்போம்.

[சுகுமாரன் வாஸந்திகையின் சமீபம் செல்ல வாஸந்திகையும் கண்களைமூடி பாடிக்கொண்டிருக்கிறாள்.]

சுகு. [தனக்குள்] ஆஹா! என்ன கருணாமிர்தமாயிருக்கின்றது! இந்தப் பரதேசியின் கானம் குயிலின்குரலைவிட இன்பமாக இருக்கின்றதே! ஆஹா! என்ன பாலிய சந்நியாசி. [வாஸந்திகையைப்பார்த்து] சுவாமி! என்னை மன்னிக்க வேண்டும் தம்முடைய நிஷ்டையைக் கலைப்பதற்காக.

ஸூ. [கண்களைத் திறந்து பார்த்து] என்ன காரணம்?

சுகு. [தனக்குள்] ஆஹா! இம்மஹாத்மாவின் கண்கள் என்ன அழகு? [வெளியாய்] சுவாமி, நானொரு சேவகன். தாங்கள் யார்?

வா. இந்தக் கட்டை இன்னதென்று தெரியவில்லையா? இது ஒரு பரதேசிக் கட்டை. காடு மலைகளில் அலைந்து திரிவது. சற்று சயனித்துப்போக இங்கு வந்தது. ஈசுவரத்தியானஞ் செய்துகொண்டிருக்கிறது.

சுகு. [தனக்குள்] பூரணசந்திரனைப்போலிருக்கின்றதே இவர் முகம்! ஆஹா! என்ன களை! [வெளியாய்] சுவாமி, தங்களைப்பார்த்தால் அதிக பால்யமா யிருக்கின்றது. தாங்கள் இந்த வயதில் துறவறம்பூண்டதற்குக் காரணம் யாது?

வா. நீரொரு சேவகன். உமக்கேன் இந்தப் பெருத்த விசாரணை? இல்லறத்தி லகப்பட்டு பரலோக வாசனை யறியாத ஒருவருக்கு இந்தக்கட்டை என்ன சொல்லியும் யாது பிரயோஜனம்? கட்டைஇங்கிருந்தலாகாதென்றால் இதோ புறப்பட்டுப் போகின்றது. [எழுந்திருக்கின்றாள்.]

சுகு. தபோதனரே, தாங்கள் அடியேன்மீது ஆயாஸப்படலாகாது. தங்களுடைய யௌவனத்தைப்பற்றி இக் கேள்வி கேட்கலாயிற்று. அதற்காகத் தாங்கள் மன்னிக்கவேண்டு மென்னை.

வா. யோகிகளுக்குக் கோபங்கூடாதென்பதறியீர்போலும்? எல்லாவற்றையுந் துறந்து ஈசன் திருவடிகளே சரணமென்றெண்ணி யிருப்பவர்களுக்குக் கோபம் எங்கிருந்து வருவது? இகழ்தலும் புகழ்தலும் இரண்டும்

சமம். இந்தக் கட்டைக்கு உம்மால் ஒரு அபராதமுஞ் செய்யப்படவில்லை. ஆயினும் துறவத்தைப் பற்றிய வார்த்தைகளை அவற்றை யறியும் பக்குவர்களுக்குச் சொல்லுவதே யன்றி மற்றவர்களிடஞ் சொல்லலாகாது.

சுகு. சுவாமி, நான் மிகவும் பெரிய அபராதஞ் செய்தேன். அடியேனை மன்னிக்கவேண்டும். [சுகுமாரன் வாஸந்திகைக்கு நமஸ்கரிக்க அவள் அதைப்பார்த்து நகைக்கின்றாள்.] சுவாமி, நான் இவ்வூரை யாளுகின்ற வீரசேனமஹாராஜன் ஏக புத்திரன், சுகுமாரன். தாங்களென்னைப்பார்த்து ஏன் நகைக்கின்றீர்கள்?

வா. இந்தக்கட்டை அப்பொழுதே இதை அறிந்தது.

சுகு. தவசிரேஷ்டரே, இவ்விடத்தில் திருடர்பயம் அதிகமாயிருந்தமையால் அவர்களைப்பிடிக்க வேடம் மாற்றிவந்தேன். தாங்கள் அடியேன்மீது கிருபைவைத்து என் அரண்மனைக்கு எழுந்தருளி என்னைக் கிருதார்த்தன் ஆக்கவேண்டும். அனுக்கிரஹஞ் செய்யவேண்டும் சுவாமி.

வா. இராஜகுமாரா, காய்கனிகளை அருந்திக் கானகத்தில் வாசஞ் செய்யும் இக்கட்டைக்கு இராஜகிருஹவாசமெதற்கு? அரசர் மனம் ஒப்புமோ?

சுகு. என் குலத்தை ஈடேற்ற வந்த குருவே, தாங்கள் அவ்வாறு கூறலாகாது. தங்களைப்போன்ற யதீஸ்வரர்களுடைய அனுக்கிரஹம் பெறுவதன்றோ பிறவிப்பயனுவது; என் தந்தை மஹாராஜாவின் அனுமதி இதற்கு உண்டு. ஏழையேனை சுவாமிகள் கடாக்ஷித்து அருள்புரியவேண்டும். [தனக்குள்] ஆ ஹா! என்ன ஸௌந்தரியம்! [வெளியாய்] இந்த யௌவன வயதிலேயே சகல

சாஸ்திரங்களையுங்கற்று இல்லறத்தை ஒழித்து துறவறத்தை மேற்கொண்ட மஹானுபாவர், தங்களைப் போன்றவர்க்குப் பணிவிடை செய்யாத வாழ்வும் வாழ்வோ? தாங்கள் அடியேன் மீது கருணைசெய்து அரண்மனைக்கு எழுந்தருளவேண்டும்.

வா. தமது வேண்டுகோளின்படி அரண்மனைக்குச் செல்வதற்குத் தடையில்லை. ஆனால் இது இருப்பதற்கு ஒரு தனி இடம் வேண்டும். அங்கு தாம் வருவதாயிருந்தாலும் முன்னர் அறிவித்துத்தான் வரவேண்டும்.

சுகு. அப்படியே ஆகட்டும், ஸத்குரு.

வா. ஆனால் தாம் முன்னே போம். நான் கூட வருகின்றேன்.

சுகு. அப்படியே. [போகின்றான்.]

வா. சுகு—மாரர்!—என்ன அழகாயிருக்கின்றார்! [சுகுமாரனைப் பின்றொடர்கின்றாள்.]

---

# மூன்றாவது அங்கம்.

## மூன்றாங் களம்.

இடம்:—விராடதேசத்து அரண்மனையில் வாஸந்திகைக்கு ஏற்படுத்தப்பட்ட ஓர் பள்ளியறை.

காலம்—மாலை.

சுகுமாரனும் கருணாகரனும் சம்பாஷித்துக் கொண்டிருக்கின்றார்கள்.

சுகு. கருணாகரா, நீ என்ன நினைக்கின்றாய்? என்ன பாலிய சந்நியாசி! அத்தவசிரேஷ்டரைச் சதா நான் பார்த்துக் கொண்டிருந்தாலே போதுமென்று தோன்றுகின்றது எனக்கு.

கரு. ஆம், இளவரசே, தாம் கூறுவது உண்மைதான். இச் சிறுவயதிலேயே சிற்றின்பத்தை வெறுத்துப் பேரின்பத்தை நாடி இப்பெருநிலைமை யடைந்துள்ளார். அம்மஹானுடைய குணநிசயங்களை விசாரிக்கவும் வேண்டுமோ? புகழத்தக்கவைகளாகவே இருக்க வேண்டும்.

சுகு. நண்பனே, காடுகளில் வசிக்கும் துறவிகளின் கைகால்கள் மிகவும் கடினமாக இருக்கவேண்டாமா? இம்மகானுடைய கைகால்கள் அப்படியில்லையே. இன்று காலை அம்மகானுடைய கால்களைத் தீண்டினேன். ஆஹா! என்னசொல்லுவேன்! மித்திரா, ஸ்திரீகளின் கைகால்கள் மிகவும் மிருதுவாயிருக்குமென்று சொல்லுவார்கள். இம்மகானுடைய கால்களோ மிருதுவுக்கு மிருதுவாயும் தாமரை மலரைப்போல் அழகாயுமிருக்கின்றன. அவருடைய திருவழகைப் பார்த்தால் புருஷர்களும் அவர்மீது காதல்கொள்வார்கள் என்பதற்குத் தடையில்லை, இம்மகானுபாவருடைய விருத்தாந்தம் என்னவோ தெரியவில்லையே.

கரு. ஆஹா! இதோ வருகிறார் தவசிரேஷ்டர்.

வாஸந்திகை வருகின்றாள்.

வா. ஈசனே! கைலாஸனே!

[சுகுமாரனும் கருணாகரனும் வாஸந்திகைக்கு வந்தனஞ்செய்து அவள் உட்கார்ந்தவுடன் தாங்களும் உட்காருகிறார்கள்.]

சுகு. சுவாமிகளது நிஷ்டை முடிந்ததோ?

வா. இளவரசே, இச்சட்டையின் நிஷ்டை முடிந்தது. குகூஷியும் நிறைந்தது.

கரு. சுவாமிகளுக்கு இஷ்டமானது எதுவோ அதனையே இன்றைப் போஜனத்திற்கு ஏற்பாடு செய்யும்படி இளவரசர் உத்தரவாயிருக்கிறது. போஜனம் எப்படி இருந்ததோ?

வா. எப்படி யிருந்தாலென்ன? பரதேசிகள் உணவை ஒரு பொருளாக மதியார்கள்? காட்டையும் வீட்டையும் சமமாகப் பாவிக்கும் சந்நியாசிகளுக்கு நல்லுணவென்றும் கெட்ட உணவென்றும் உண்டா? இக்கட்டையில் எரிந்துகொண்டிருக்கும் ஜாடராக்கினிக்கு ஏதாவது ஆஹுதி கொடுக்கவேண்டியது கடமை.

சுகு. சுவாமிகளுடைய விருத்தாந்தத்தை யறிய மிக ஆசையுள்ளவனா யிருக்கிறேன். அருள்செய்யவேண்டும்.

வா. இளவரசே, ஏன் அவசரப்படுகின்றீர்? நன்றாகப் பரிசோதித்த ஒருவரிடமன்றோ ரகசியத்தைக் கூறலாகும். இப்படிச் சொல்லுகிறேனென்று என்மீது கோபங்கொள்ளாதீர். பரதேசிகளாயிருந்தாலும் அவர்களுக்கும் ஒவ்வொரு ரகசியம் இருக்கும். அவைகளைக் கட்டமாத்திரத்தில் சொல்லி விடலாமோ?

சுகு. சுவாமிகள் இஷ்டப்பிரகாரமே ஆகட்டும்.

[வாஸந்திகை தனக்குத் தேகவலி யுண்டானதாய் அபிநயிக்கின்றாள்.]

சுவாமிகளுக்கு தேகம் அசௌக்கியமா யிருக்கின்றது போலும். என்ன செய்கின்றது?

கரு. முனிஸ்ரேஷ்ட, அசௌக்கியமாயிருந்தால் ஏதேனும் மருந்து—

வா. இந்த மண்ணுக்கு மருந்துங் கூடவா? நேற்றெல்லாம் காடுமலைகளில் நடந்துவந்தமையால் இக்காயம் கொஞ்சம் சிரமப்படுகின்றது. அவ்வளவுதான்.

சுகு. [தனக்குள்] ஆஹா! என்ன வைராக்கியம்! [வெளியாக] ஆயின் ஆயாசந்தீரச் சற்று படுத்துக்கொள்ளலாமே.

வா. அப்படியே செய்யலாம். அந்தக் கிருஷ்ணாஜினத்தைக் கொடும்.

சுகு. இதோ தந்தேன்.

[சுகுமாரன் கிருஷ்ணாஜினத்தை விரிக்க வாஸந்திகை அதில் உட்கார்ந்து ஈசனைத் துதிக்கின்றாள். அப்பொழுது சுகுமாரன் அவளது கரத்தைப்பற்ற அவள் திடுக்கிட்டுப் பார்க்கிறாள்.]

சுவாமிகள் ஏன் திடுக்கிட்டது?

வா. இராஜகுமாரா, உடல் கூசத் திடுக்கிட்டேன். வேறே ஒன்றுமில்லை.

சுகு. சுவாமி, ஒரு விண்ணப்பம்.

வா. சொல்லும்.

சுகு. முக்தி பெறுவதற்குச் சிறந்த மார்க்கம் யாதென்று எனக்கருள் செய்யவேண்டும்.

வா. உம்.—உங்களுக்கு இன்னவிதமாய் உபதேசிப்பதென்பது தோன்றவில்லையே.

சுகு. எங்களைப்போன்ற அஞ்ஞானிகளுக்கு இன்ன விதமாய்ப் போதிப்பதென்று தோன்றுவது கஷ்டந்தான்.

வா. ஆயினும் ஒருவாறு சொல்லுகின்றேன். உண்மையாக ஒருவன் சித்திபெற வேண்டுமானால் அவன் முதலில்,

தனது சித்தத்தை ஓர் நிலையில் நிறுத்தப் பயில வேண்டும்.

சுகு. சுவாமி, அதை யெப்படி அடைவது முதலில் ?

வா. முதலில் பஞ்சேந்திரியங்களை நிக்ரஹஞ் செய்யவேண்டும். அதாவது ஊண் விருப்பம், காக்ஷி விருப்பம், ஊற்று விருப்பம், வாசனை விருப்பம் முதலிய பல விருப்பங்களையுங் கெடுத்தல்வேண்டும். இதற்குபாயம் இவைகளை நுகர்தற்கான பொருள்களை உபேக்ஷை செய்து ஒழித்தல்.

சுகு. அப்படியா ?

கரு. முனிவர, அடியேன் விண்ணப்பம் ஒன்றிருக்கின்றது. சுவாமிகள் தனியாயிருக்கும் போது செய்துகொள்ளுகிறேன்.

வா. அதற்கென்ன ? அப்படியே செய்யலாம்.

சுகு. கருணாகரா, என்ன அவ்வளவு ரகசியம் ? கேட்கலாதோ நானும் ?

கரு. அரசே, பிறகு நான் சொல்லுகிறேன் உமக்கு.

வா. இவ்வாறு இந்திரிய நிக்கிரகம் செய்தால் மனத்தை ஒருவழிப்படுத்தித் தாரணைக்க ணிற்றல் முடியும். அப்படி ஒருவழிப்படுத்தின மனத்தை நிலை திரிய விடாது உலகமெல்லாமாய் அல்லதுமாய் எங்குநீக்க மற நிறைந்து விளங்குகின்ற சச்சிதானந்த ஸ்வரூபியாகிய பரமேஸ்வரனுடைய திருவடியிற் சேர்த்து அவனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தால் முக்தி பெறலாம். இவற்றிற்கெல்லாம் பக்திவேண்டும் பக்தியினால்தான் ஸித்திபெறுவது.

ஒரு சேவகன் வருகிறான்.

சே. இளவரசே, தம்மை மஹாராஜா அவசரமாய் அழைத்துவரச் சொன்னார்.

சுகு. அப்படியா ?—முனிவர, தந்தை என்னை அழைக்கின்றாராம். உத்தரவளிக்கவேண்டும்.

வா. போய்வாரும். இராஜாங்க விஷயத்தைப்பாரும் முதலில். [சுகுமாரனும் சேவகனும் போகிறார்கள்.]
ஐயா, கருணாகரரே, நீரெதுவோ தனித்துப் பேசவேண்டுமென்றீரே, அது என்ன ?

கரு. சுவாமி, வேறொன்றுமில்லை. இளவரசர் மஹாராஜாவின் ஏகபுத்திரர். மஹாராஜா இவரை ஹஸ்திநாபுரத்தரசன் விக்ரம வீரருடைய புதல்வி,—பாவம்,—பேதை—வாஸந்திகையை—

வா. யாரை ?

கரு. வாஸந்திகா தேவியை—

வா. உம்.—

கரு. விவாகஞ் செய்துகொள்ளும்படி கேட்டதற்கு மாட்டேனென்று மறுத்துவிட்ட இளவரசர் சில தினங்களுக்குமுன் அம்மாது சிரோன்மணியின் படத்தைக் கண்டு அதிக மோகங்கொண்டு—

வா. யார் கொண்டது ? இளவரசரா ?

கரு. ஆம். இத்தருணத்தில் அப்பாதகன் குலத்துரோகி, குரூரகர்மன் அக்குற்றமற்ற வாஸந்திகையைக் கொன்றுவிட்டு அந்நாட்டை அபகரித்துக்கொண்டதாக—

வா. ஆஹா ! என்ன பாதகன் !

கரு. அந்நாட்டிலிருக்கும் எங்கள் மஹாராஜாவின் ஆப்தர் சுபுத்தி எழுதின கடிதத்தை மஹாராஜா இளவரசருக்குக்காட்ட அதைகண்டு அவர் மூர்ச்சையடைந்தார்—

வா. ஐயோ, பாவம்! இளவரசருக்கு அக்கன்னிகையின் மீது அவ்வளவு காதலிருந்ததா?

கரு. அதையேன் சொல்லவேண்டும்! அவர் தந்தை பிறகு என்ன வேண்டியும் கேளாது வேறெந்த ஸ்திரீயையும் மணஞ்செய்து கொள்ளுகிறதில்லையென்று பிரதிக்ஞை செய்துகொண்டு துறவுபூண நிச்சயித்து சுவாமிகளைப்போன்ற பெரியோர்களிடம் உபதேசம்பெற எண்ணியிருக்கின்றார். சுவாமிகளதுதான் முதலுபதேசம் அவருக்கு. அவர் இவ்விஷயத்தில் ஒரேபிடிவாதமாயிருக்கின்றார். சுவாமிகளது உபதேசத்தைப் பெற்றால் தான் கொண்ட எண்ணத்தை ஊர்ஜிதப்படுத்தி விடுவாரேயென்று பயந்து தெரிவித்தேன். அவ்வளவுதான்.

வா. அப்படியா? நல்லது நீர் ஒன்றிக்கும் அஞ்சவேண்டாம். என்னுபதேசம் ஒரு பொழுதும் வீண் போகாது. எதற்கும் தாம் இளவரசரை நாளை சாயுங்காலம் வேலையற்றிருந்தால் இங்கு வரச்சொல்லும். நான் அவருக்குத் தக்கயுக்தி சொல்லுகின்றேன்.

கரு. சுவாமி, தாங்கள் திருவுளம் வைத்தால் ஆகாதகாரியமும் ஒன்றுண்டோ? தங்களாலே இதுமுடியுமென்று ஏதோ என் மனதில் தோன்றுகின்றது.

வா. எல்லாம் ஈசன் செயல்!

கரு. இனி எனக்கு விடையளிக்க வேண்டும். நான் மஹாராஜாவைப் பார்க்கவேண்டியிருக்கிறது.

வா. அப்படியே. [கருணாகரன் போகிறான்.]

என்ன ஆச்சரியம்!—எல்லாம் அம்பிகையின்செயல்!

[ஈசனைத்தியானித்த வண்ணம் போகின்றான்.]

# மூன்றாவது அங்கம்·

## நான்காங் களம்·

---

இடம்:—விராடதேசமன்னன் அரண்மனையில் வாஸந்திகைக்கு ஏற்படுத்திய பள்ளியறை.

காலம்:—மாலை.

[வாஸந்திகை நிலைக்கண்ணாடி முன்பாக தன்னழகைப்பார்த்துக்கொண்டு நிற்கின்றாள்.]

வா. ஆஹா! ஈசன் செயலை அறிந்தவர் யார்? நான் எப்பொழுதாவது நாடு நகரமிழந்து அயலார் என்னைப் பார்த்துப் பரிதாபப் படும்படியான இந்த ஸ்திதிக்கு வருவேனென்று நினைத்திருந்தேனா? திக்கற்றவர்க்குத் தெய்வந்தான் துணை! நான் முன்பிருந்த ஸ்திதியென்ன, இப்பொழுதிருக்கும் ஸ்திதியென்ன! இதுவெல்லாம் நான் பூர்வஜென்மத்திற் செய்த பாபத்தின் பலனன்றோ? விதி யாரைத்தான் விட்டது? இதைப் பற்றி நான் எண்ணியெண்ணித் துக்கிப்பதால் அடையப்போகின்ற பயனென்ன? நான் ஈசனருளால் இவ்வரண்மனையை யடைந்ததுமல்லாமல் என்மீது காதல் கொண்டிருக்கின்ற இந்நாட்டு இளவரசரையும் எனக்குச் சிஷ்யராகப்பெற்றேனே! இதுவும் என் பாக்கியந்தான். அன்று நான் இளவரசரைச் சத்திரத்தில் கண்டதுமுதல் என் உள்ளம் அவரையே நினைத்த வண்ணமாயிருக்கிறது. என் மனத்தில் அவர் குடிகொண்டு விட்டார். ஆஹா! நான் எவ்வாறு அவருடைய கண்களின் அழகை மறக்க முடியும்? எப்பொழுது என் கண்கள் அவருடைய அழகை அள்ளியுண்டு களிகூர்ந்தனவோ அதுமுதல் அவரை மீட்

டும் பார்க்கும் போதெல்லாம்-பாவி-என்னுடைய திருஷ்டி தோஷத்தால் அவருடைய அழகுக்கு எங்கு குறைவு வருகின்றதோ என்று என்மனம் பயப்படுகின்றது. ஆ! பெண்ணாய்ப் பிறந்தால் இப்படிப் பட்ட அழகிய புருஷனை அடையவேண்டும். என்ன ஸௌந்தரியவான்!— ஏன் இன்னும் இளவரசர் வரவில்லை? ஒருகால் கருணாகரர் சொல்ல மறந்து விட்டிருப்பாரோ? அப்படியிராது. அவர் வருவார்—நான் எப்படி நாணத்தை விட்டு என் எண்ணத்தை இளவரசருக்குத் தெரிவிப்பது? ஒரே பிடிவாதமாய்த் துறவறத்திலேயே மனம் வைத்திருக்கின்றாரே. அவ்வாறு துறவு பூண்டுவிட்டால் நான் என்ன செய்வது? பிறகு என்கதி என்னவாவது? நான் வாஸந்திகை என்பதை அறிந்தால் அப்பொழுதாவது அவர் தன் எண்ணத்தை விட்டுவிட மாட்டாரா? எப்படியாவது இன்று நான் அதிக ஜாக்கிரதையாய் அவரோடு பேசி அவருடைய உள் எண்ணத்தை யறிந்து கொள்ளவேண்டும்.—ஒருகால்—[காலடிச்சத்தம் கேட்டு] யாரோ வருகின்றதுபோ லிருக்கிறது.

[தியானம் பண்ணுவதுபோல் இருக்கின்றாள்.]

சுகுமாரன் வருகின்றான்.

**சுகு.** சுவாமி, மன்னிக்கவேண்டும். சுவாமிகள் என்னைவரும்படி சொன்னதாக சற்று நேரத்திற்குமுன்பு தான் கருணாகரன் கூறினான். உடனே வராததற்காக சுவாமிகள் என்னைமன்னிக்கவேண்டும்.

**வா.** என்ன குற்றஞ் செய்ததற்காகத் தம்மை மன்னிக்க வேண்டியது? வேலையின்றி இருந்தால்மாத்திரமே

சற்று வந்துபோம்படியாய்ச் சொல்லி யனுப்பினேன். கருணாகரர் ஏன் உம்முடன் வரவில்லை?

சுகு. ஏதோ இராஜகாரியமாய் மகாராஜா அவனை அழைத்ததாக அவரிடஞ் சென்றிருக்கின்றான்.

வா. அப்படியா? ஆனால் இப்போது தாமும் மஹாராஜாவிடம் போகவேண்டியிருக்குமோ?

சுகு. வேண்டியிராதென்று எண்ணுகின்றேன். ஆயினும் உறுதியாகச் சொல்லமுடியாது. சுவாமி, இராஜாகருமங்களுக் கென்ன? ஆயிரக்கணக்கா யிருக்கின்றன. ஒருநாள் முழுவதுஞ்செய்தாலும் ஒழிவதுமில்லை. எங்கள் விதி இப்படியாய்விட்டது.

வா. இளவரசே, மக்கட் பிறப்பிற் சிறந்த க்ஷத்திரியவம்சத்திற் பிறந்த நீர் உமக்குரிய இராஜ தர்மத்தை ஒரு தொந்திரவாக எண்ணலாமா? அறிவு ஊக்கங்களாற் சிறந்த தம்மைப்போன்றவர் இல்வாழ்க்கையை வெறுத்தொழிவாராயின் செங்கோல் செலுத்துவார் யார்? எம்போலிய விரதிகளையும், வறியோர்களையும், அந்தணரையும் துணைநின்று காப்பாற்றுவார் யார்?

சுகு. சுவாமி, நான் என் குலதர்மத்தை யனுஷ்டிக்க மனம் வருந்தவில்லை. இந்த இராஜகாரியம் சுவாமிகளையொத்த பெரியோருடைய சந்நிதியை யடைந்து நல்லுபதேசம் பெறுவதற்கு இடந்தரவில்லையே என்று தான் மனம்வருந்தினேன்.

வா. ஓஹோ! அப்படியா? என்னைப்போன்ற பரதேசிகளின் உபதேசம் என்ன பயன்தரும்? பரதேசிகளின் வலையிற்சிக்கி அநேகர் தமது பொருள்களையெல்லாம் வழியல்லா வழியிற் செலவழித்து மானமழிந்து மதிகெட்டுப்போவதை நீர் காணவில்லையா?

சுகு. குருவே, அதுவும் உண்மையே. அப்படிப்பட்ட பரதேசிகளுள் ஒருவராக நான் சுவாமிகளை மதிக்கவில்லை. நான் சுவாமிகளை அரண்மனைக்கு அழைத்துவந்தது சுவாமிகளுடைய வலையிற்சிக்கவே. அவ்வாறு சிக்குண்ணும் பாக்கியம் எப்போது பெறுவேனென்று ஈசனை நான் சதா தியானித்துக் கொண்டிருக்கின்றேன் அதைப்பெறும் புண்ணியம் நான் செய்திருக்கின்றேனோ என்னவோ ?

வா. [தனக்குள்] மனமே அவசரப்படாதே. [வெளியாய்] நீர் என்னுடைய உபதேசத்தில் இவ்வளவு அவா வைத்திருப்பது எனக்கு வியப்பைத் தருகின்றது. நீர் என்னுடன் பழகிப் பல நாளாகவில்லை, என்னுடைய நிலையை அறியீர். என்னுடைய உபதேசம் என்ன பயன் தருமென்று உன்னினீர் ? அரசசெல்வத்தைத் துறந்துவிடுதற் கேற்ற பயன் தரவல்லதோ ? மங்கையர்களைக் கண்டு மதிகெட்டு மாணுறுவார்போல தவவேடத்தைக் கண்டு மயங்கிவிடலாமோ ? சூழ்ச்சியில் தேர்ந்த அரசர்களுக் கியல்போ இது ?

சுகு. சுவாமிகளைக் கண்டபோதே என்மனம் சுவாமிகளிடத்து சென்று விட்டது. சுவாமிகள் கண்ணெடுத்துப் பார்க்கும்போது என்னுயிர் பரவசமாய் விடுகின்றது. இந்நிலைமையிலிருக்கும் நான் சுவாமிகளை அளந்தறியவல்ல ளுவேனோ ?

வா. நீர் என்னை அளந்தறியாதமுன் என்மேன் மனத்தை விட்டு விடலாமோ ? இது ஆண்மைக் கழகோ ? அரசர்க் கியல்போ ? சித்த சுவாதீன மில்லாத உமக்கு ஞானோபதேசம் எப்படியாகும் ?

சுகு. சுவாமிகளுடைய இனிய மொழிகளைக் கேட்கக் கேட்க எனது மனவலி கெட்டுப் போகின்றது. சுவாமிகள் கண்கொண்டு நோக்கும்போது எனதுயிர் தன் வயமழிந்து நிற்கின்றது. சுவாமிகள் முன்னிலையி லிருக்கும்போது நான அடையும் ஆனந்தம் சொல்லத் தரமில்லை. ஆதலால் சுவாமிகள் விரைந்து என்னை ஆட்கொண்டு சித்த சுவாதீன முள்ளவனாகச் செய்ய வேண்டும்.

வா. நீர் கவலைப்படவேண்டாம். உம்மை நான் சீக்கிரத்தில் சித்தசுவாதீன முள்ளவனாகச் செய்து வைக்கிறேன்.

சுகு சுவாமி, அருள் செய்யவேண்டும். சுவாமிகள் என்னை அடிமைகொள்வதற்கு நான் என்ன விரதஞ் செய்ய வேண்டுமென்றாலும் செய்கின்றேன்.

வா. விரதமொன்றுஞ் செய்யவேண்டியதில்லை. சிறிது சிறிதாக நீர் உமது நிலைமையை யறிந்து மனத்தை ஒருவழிப் படுத்த லொன்றுதான் வேண்டும். நீர் இப்போதே எனக்கடிமையாய் விட்டால் என்னையும் உம்மையும் உலகத்தார் நிந்திக்க மாட்டார்களோ ? உமது மனைவியாதியர் என்னை நோகார்களோ ?

சுகு. அப்பாவம் எனக்கொன்றுமில்லை. அதைப்பற்றி சுவாமிகளுக்கு யோசனை வேண்டாம்.

வா. என்ன பாவமில்லை ?

சுகு. மனைவியாதிய பாவம்.

வா. என்ன ! உமது மனைவி என்ன ஆனாள் ?

சுகு. சுவாமி, எனக்கின்னும் விவாக மாகவில்லை.

வா. என்ன ஆச்சரியம்! நீரின்னும் விவாகஞ்செய்து கொள்ளவில்லையா? காரணமென்ன?

சுகு. சுவாமி, எனக்கு விவாகத்தில் இஷ்டமில்லை. துறவு பூண்டு வீடு பெறவேண்டுமென்பதே என் கருத்து.

வா. இளவரசே, இதுஎன்ன எண்ணம்? இல்லறத்திலிருந்து இன்பதுன்பங்களை அனுபவித்தபின்னரன்றோ அதன் பேற்பாதையாகிய துறவறவொழுக்கத்தில் செல்லவேண்டும்? இல்லையாயின் அவ்வொழுக்கத்தில் நெறி தவறுது நிற்ற லியலாதாகும். மனந்தூயதாக இயல்பாய் ஞான முதியாதபோது செய்யும் உபதேசம் எல்லாம் வியர்த்தமாய்விடுமே.

சுகு. சுவாமி, என்ன அப்படி சொல்லுகின்றீர்கள்? சுவாமிகளுடைய உபதேசமும் வியர்த்த மாகிவிடுமோ? அதைப்பெற்றும் நான் நெறிதவறுவேனோ? எனக்கு இல்வாழ்க்கையில் இஷ்டமில்லை. இந்தக்ஷணமே இந்நாட்டைவிட்டு இராஜபோகங்களைத் துறந்து சுவாமிகளோடு ஆரண்யத்திற்குச்சென்று சுவாமிகள் புசிக்கும் கனிவர்க்கங்களைப் புசித்துக்கொண்டு சுவாமிகளுக்குப் பாதசேவை செய்துகொண்டிருக்க ஆபத்தமா யிருக்கின்றேன்.

வா. வீட்டைவிட்டுக் காட்டிற்குப்போவதால் துறவுபூண்டு கொள்ளலாமா? மனமன்றோ துறக்கவேண்டும். அதிருக்க நீர் ஏன் உம்முடைய அழகிற் கேற்ற ஒரு பெண்ணை விவாகஞ்செய்து அவளோடு இல்லறம் நடத்திப் புதல்வரைப்பெற்று அவர்களிடம் இவ்வரச கருமத்தைக் கொடுத்துவிட்டுப் பின் துறவில் செல்லலாகாது?

சுகு. சுவாமி, விவாகஞ் செய்துகொள்வது காலில் விலங்கு மாட்டிக்கொள்வதற்குச் சரியன்றோ?

வா. இளவரசே, ஒருவிஷயத்தைத் தீரவிசாரியாது அதை நிந்தித்துத் தள்ளுவது நியாயமன்று. இல்லறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகளையுடைய பெண்ணோடு கூடிவாழ்ந்து அதன் சுகங்களை அனுபவித்தறியாத நீர் இவ்வாறு அதனை இழித்துக் கூறுவது நியாயமல்ல. இல்வாழ்க்கையிலிருந்து அதற்குரிய இயல்போடுகூடி ஒருவன் வாழ்வானாயின் அவ்வாழ்க்கை மற்றெல்லா வாழ்க்கையினுஞ் சிறந்ததன்றோ? ஆகையால் உமது மனத்திற்கிசைந்த மங்கையை நீர் விவாகஞ் செய்துக்கொண்டு சிலகாலம் இல்லறத்தில் வாழ உமக்கென்ன தடை?

சுகு. [யோசித்து] சுவாமி, இவ்விஷயம் என்மனத்தைப் புண்படுத்துகின்றது. இல்லறத்தில் புகுந்து காமாந்தகாரத்தில் சிக்கினவருக்கு மீட்சியுமுண்டோ?

வா. இளவரசே, இல்வாழ்க்கை காமாந்தகாரத்தில் சிக்குவதன்று. உலகத்தில் அறமென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது இல்வாழ்க்கையே. அது ஐம்புலன்களையும் மனத்தையும் ஒறுத்தடக்கவேண்டிய அரிய துறவறம் போலாது பொறியின்பங்களை அனுபவித்தற்கேற்ற இயல்புடையது. இல்வாழ்க்கையிலிருந்து கொண்டே முக்தி யடைவதற் கேதுவான ஆத்மஞானம் பெறுவது அரிதன்று. காட்டிற் சென்று கந்தமூல பலங்களைப் புசிப்பதினால் அது கைகூடுவது எளிதுமன்று. ஆகையால் நீர் இந்த எண்ணத்தை நீக்கிவிட்டு சில நாள் இல்லறத்திலிருந்து அதன் சுகங்களை யனுபவித்தபின் துறவறத்தை மேற்கொள்ளலே

தக்கது.—அது நிற்க, இவ்விஷயம் உமது மனத்தைப் புண்படுத்துகின்றதென்றீரே அது என்ன? நீர்விரும்பிய பெண் உம்மை மணந்துகொள்ள மாட்டேனென்றாளா அல்லது நீர் காதலித்த பெண்ணை உமது தந்தையார் உமக்கு விவாகஞ் செய்துவைக்க மாட்டேனென்கின்றாரா?—

சுகு. [மனோதுக்கத்துடன்] இல்லை, இல்லை.

வா. பின்னையென்ன உமது வைராக்கியத்திற்குக் காரணம்? இப்பரத கண்டத்தில் எத்தனையோ இராஜகுமாரிகளிருப்பார்கள். அவர்களுள் சிறந்த வொருத்தியை விவாகஞ் செய்துகொள்ளுகின்றது தானே? சற்று பொறும். ஞானதிருஷ்டியால் அறிந்துசொல்லுகிறேன்.

[கண்களைமூடி சற்று மௌனமாயிருந்து பின்பு கண்களைத் திறந்து]

இளவரசே, அனேகர் இருக்கின்றார்கள். ஏன் மகததேசத்து இராஜகுமாரி இருக்கின்றாள்—

சுகு. உம்—சுவாமி, அவள் மகா குரூபியாயிற்றே.

வா. அப்படியா? அவளை மணக்க விருப்பமில்லையாயின் அங்கதேசத்தரசன் மகள் அதிக சௌந்தரியமுடையவளென்று சொல்லுவதை நானும் கேட்டிருக்கின்றேன். இரதியென்றே சொல்லவேண்டுமோம். இராஜீவாக்ஷியென்று பெயராம். அவளை ஏன்?—

சுகு. சுவாமி, நான் அவளை ஒருவாறு அறிவேன். அவள் அகங்காரி, அற்பகுணமுடையவள். ஆயினும் சில தினங்களுக்குமுன் அவளுக்கு விவாகமாகி விட்டது.

வா. அப்படியா? அவள் யாரை விவாகஞ் செய்துகொண்டாள்?

சுத. அந்தத் துக்கத்தை ஏன் கேட்கின்றீர்கள்? அவளை வத்ஸராஜன விவாகஞ் செய்துகொண்டான். அவன் நல்ல வித்வான். நவீன கவிகளும் செய்திருக்கின்ருன். அவனுக்கு இந்த அகங்கறுத்த அகவகாரி வந்து வாய்த்தாள.

வா. நல்லது, நீர் இராஜகுமாரிகளின் குணகுணங்களையெல் லாம் நன்ருய் விசாரித்திருக்கின்றீர்போலும். பாஞ் சால தேசத்தரசன் மகள் பத்மாவதி இருப்பதாகத் தெரியவருகிறது அவளை விவாகஞ் செய்துகொள்ள லாமே.

சுத. சுவாமி, அவள மிகவும அழகுடையவள்தான. ஆயி னும் அவளிடத்தில சிலதுற்குணங்கள் இருப்பனவாக அறிந்தேன.

வா. கோசலநாட்டுக் கிருஷ்ணவேணியோ?

சுத. அவள் என் காதலுக் குரியவளல்ல.

வா. ஆனல் உம்மாற் காதலிக்கப்பட்டவள் ஒருத்தி யிருக் கின்ருள் போலும்.—ஹஸ்தினபுரத் தரசன் மகள் வாஸந்திகை இருக்கின்ருள். அவளை விவாகஞ்செய்து கொள்ளுகிறதுதானே? அவள் அவ்வளவு அழகுள ளவளல்ல போலும்.

சுத. சுவாமிகள் அவளைக் கண்டதில்லைபோலும். முன் சொல்லப்பட்டவர்கள் ஒருவரும் அவளுக்கிணையாக மாட்டார்கள். [மனோதுக்கத்துடன்] பாதகா! பாதகா!

வா. என்ன! என்ன! இளவரசே, நீர் சொல்லுவது இன்னதென்று தெரியவில்லையே. வாஸந்திகையின் பெயரைக் கேட்டவுடன் நீர், இவ்வளவு வருத்த மடையவேண்டிய காரணமென்ன? அவள் உம்மை விவாகஞ்செய்ய மறுத்து விட்டாளோ?